*"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is; but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it." But,*

*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE.




*அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்]* [God is Love: Knowledge is Power: *Aum*

ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**

புத்தகம். **21.**] **1913**௵ ஜூன்௴, பிரமாதீச௵ ஆனி௴ [சஞ்சிகை. **3.**

## NOTICE.

The Editor of the *Vivekachintamani* while thanking his contributors for their valuable contributions, would like to draw the attention of the public to the fact that in pursuance of the uniform policy of this journal, articles could be received only on the understanding that the entire copy right in the articles should be vested solely in the Editor. It would not have become necessary to mention this matter now but for the fact that literary pilfering is becoming more and more prevalent in the journalistic world; and the intentions of the contributors who have by their free gift of the manuscripts helped to further the objects of the Diffusion of Knowledge Agency which the Editor has been maintaining and working for the public good under great difficulties and trials for the past twenty-five years, are being sought to be frustrated by unscrupulous persons.

C. V. Swaminathaiyar,
Editor, & Founder V. C.

Lalita Publishing Co.,
Sole Agents and Managers
19, Adam St, Mylapore, S

S Subrahmaniem,
Joint Hon. Secretary,
Vivekachintamani Rev: Committee.

"To sell the mind for money is a greater sin than to sell the body."

1. அறிவைப்பரவச்செய்வதற்கான நம் விவேகசிந்தாமணிக்கு வியாச, விஷய தானம் செய்வோர் யாவரேயாயினும் உண்மையான அந்தர்த்தியானத்தோடு பூர்ணமதஸம்மதமாய் விஷயார்ப்பணஞ் செய்யல் வேண்டும். தானம் செய்தபின் தத்தாபஹாரம் செய்யக்கூடாது. தத்தாபஹாரசிந்தையினர்க்கு விவேகசிந்தாமணி சங்கப்பலகைபோலிடங்கொடாதொடுங்கும்.

2. உழைக்கும்வழி யுணராது பிழைக்கவழி தேடும் சில தப்பிலிகள் நம்மை மோசஞ்செய்யாதபடி விவேகசிந்தாமணியிலுள்ள சுதந்திரமெல்லாமெமக்கேஉரிமையாமென்று சட்டப்படி ஆதிமுதற்கொண்டே ஸர்க்கார் கெஜட்டில் தாக்கல் செய்யப்பெற்றிருக்கிறது.

3. விவேகசிந்தாமணியில்வரும் விஷயங்களையாவது அவைசம்பந்தமான ஸாதன ஸம்யம விவேகவிளக்கப் பேர்களையாவது தர்மவிரோதமாயுபயோகித்துக் கர்மவிக்னம் செய்வோர் பிழைக்கவழிதெரியாப் புல்லியர் புகும் பாழ்நரகிற்புக்கார் கதியாவர் : அடாஅது செய்தவா பாடஅது படுவர் : இகபர மிரண்டிலு மிது ஸத்தியம் ஸத்தியம், பலிக்குமென்றே திருஞன் பழனியாண்டவன். வேலுமயிலுந் துணை. ஆண்டானடிமையாய் உழைக்க உடன்பட்டான் கைச்சாற்றிது. ஓம்





விவேக சிந்தாமணி

## The Indian Renaissance.

"The Renaissance of Bengal, in spite of the fact of political dependence may well be one of the greatest turning points in the story of mankind—for the forces which go to make history are spiritual and the greatest victories are spiritual.

"And if the present British administration is leading forward to provincial autonomy, reaching out in the end to the freedom of India as a whole(as great Englishmen snch as Macaulay and Trevelyan have hoped) then the record of the attainment of that spiritual freedom, which is the fount and base of the material must be of absorbing value."—Rev C. F. Andrews (Delhi), in "Some Thoughts on Modern Bengal."

## இந்தியாவின் திருப்பள்ளியெழுச்சி.

—:(*):—

ஒரு தேசத்தின் சரித்திரம் அத்தேசத்தில் ஜநித்த உத்தமபுருஷர்களின் சரித்திரத்தில் விளங்கும். ஆதலால் ஸ்வயநலம் பாராட்டாது பொதுநலம் கருதியுழைக்கும் எல்லாரும் தேச சமஷ்டி விர்த்திக்கு இன்றியமையாதவர்களாவார்கள். இவர்களுடைய வாழ்நாள் தேச சமஷ்டியின் வாழ்நாளில் ஒரு பாகமாய்விடுகிறது. ஊருக்குழைப்பார் உத்தமசித்தர்களாகவே யிருக்க வேண்டும். இல்லாவிட்டால் உள்ளபடி ஊருக்குழைக்க முடியாது. உத்தமசித்தம் ஹிருதயசுத்தியின்றி வாய்க்காது. ஹிருதய சுத்தியும் உண்மைவிருதமின்றிப் பலிக்காது. ஸத்யமேஜெயமென்று யார் யார் ஸத்யவிருத மனுஷ்டிக்கிறார்களோ அவர்களெல்லாரும் ஹிருதயசுத்தித் துவாரா ஸத்தியத்தை யுணர்ந்து ஸத்தியமே யாகிறார்கள். அவர்கள் ஸிம்மாஸனத்திருந்தாலும் சரி சுடலை காத்தாலும்சரி, அவர்களுடைய ஸத்யம் அவர்களைக்காக்கும். அந்த ஸத்யம் தானே ஹிருதய சுத்தித்துவாரா அவர்களுக்கு எல்லா ஸாம்ராஜ்யத்தையும் அளிக்கும். அரிச்சந்திரன் ஸத்யம் அவனைத் தலைகாத்ததேயன்றி அவனுடையராஜ்யமும் ராஜ்யாதிகாரமும் அவனைக் காக்கவில்லை. உண்மையான ராமராஜ்யம் ரமணீயமான ஆத்மாவுக்குள் இன்னமுமிருக்கிறது. அந்த ராஜ்யத்தை யடைந்து ஆத்மானந்தத்தை அனுபவிக்கத் தெரியாதவர்களுக்கு எவ்வித ஸ்வதந்திரமும் பொருந்தாது; ஏனெனில் அதற்கு வேண்டிய அதிகாரத்துவம் அவர்களிடத்தில்லை.

ஆத்மா ஸ்வபாவமாகவே எல்லாவித ஸ்வதந்திரங்களையும் உடையதாயிருக்கிறது. அதை அறியமாட்டாதவர்கள் உலகில் ஸ்வதந்திரமாயிருப்பது இன்னதென்பதை யுணரமாட்டார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு ஸ்வதந்திரம் கொடுத்தால் அவர்கள் குரங்கின்கையில் கொள்ளியைக் கொடுத்ததுபோல் ஊரையும் கெடுத்து தங்களையும் கெடுத்துக்கொள்வார்கள்.

உத்தம ஜனசிரேஷ்டர்கள் இந்தியாவில் எங்கும் அருமையாக விருக்கிறார்கள். ஆனால் பெங்காளத்தில் இவர்கள் தொகை யதிகமாயிருக்கிறது. அதனால் வங்காளம் புநர்ஜநந முற்றுப் புதுவழியிலிறங்கி யிருக்கிறது.

சென்ற 50-வருஷங்களாக வங்காளத்தில் அவதரித்த ஜனசிரேஷ்டர்களின் முயற்சியால் வங்காளபாஷை மிகவும் விர்த்தியடைந்திருக்கிறது. இலக்ஷிய இலக்ஷண கிரந்தங்கள் வங்காளபாஷையில் நிறைந்திருப்பதுபோல் தற்காலத்தில் வேறெந்த பாஷையிலும் இல்லை. மற்றவர்களெல்லாம் பூர்வ கிரந்தங்களைப்படித்து வித்யாகர்வம் பிடித்தலைகிறார்கள். வங்காளத்திலோ பூர்வகிரந்தங்களின் ஸாரமெல்லாம் உண்மையான வித்வத்லக்ஷணம் பொருந்தியவர்கள் முயற்சியால் தற்கால கிரந்தங்களாக வெளிவந்து லக்ஷக்கணக்காகப் பிரசுரிக்கப்பட்டு சாமான்ய ஜனங்களால் வாசிக்கப்பட்டு வருகிறது.

வங்காளதேசம் தூக்கத்னிதவிட்டு திருப்ப ள்ளியெழுச்சி கொண்டதற்குக் காரணம் ஊரு க்குழைக்கும் உத்தம புருஷர்கள் அத்தேசத் தில் அவதாரமான விசேஷத்தாலென்று சொ ல்லவேண்டும். அப்படி யவதாரமாகி யுழைத் தவர்களில் ராஜாராம்மோஹன்ராய் அவர்கள் பேர்போனவர். இவர்தான் பிரம்மஸமாஜத் தை ஏற்படுத்தினவர். மஹரிஷி தேவேந்திர நாத் டாகோர் அவர்கள் மற்றொருவர். கேசவ சந்திரசேனர், பங்கிம் சந்திர சட்டர்ஜி, ஈசுவர சந்திர வித்யாஸாகரர் முதலான இன்னம் எத் தனையோ பேர்கள் இந்தியாவின் சமஷ்டிமனம் தூக்கத்தை விட்டெழுந்திருக்கும்படி ஊருக் குழைத்து உத்தமவழியில் பாடுபட்டிருக்கிறா ர்கள். இப்பொழுது ரவியேந்திரநாத் டாகோர் என்பவர் இங்கிலாந்தில் விசேஷமாகக் கொண் டாடப்படுகிறார். அவர் கவிசக்ரவர்த்தியெனப் பேர்பெற்றிருக்கிறார். அவருடைய கிரந்தங்க ளெல்லாம் வங்காள பாஷையில் எழுதப்பட் டனவாயினும் சிற்சில இங்கிலீஷில் மொழி பெயர்க்கப் பெற்றிருக்கின்றன. கம்பர் காளி தாஸரைப்போல அவர் இந்தியாவின் மஹா கவியென்று பெயரெடுத்திருக்கிறார்.

இவர், மஹரிஷி தேவேந்திரநாத் டாகோர் அவர்களுடைய புத்திரர்களில் ஒருவர். இவ ருடைய சகோதரர் ஒருவர் ஸிவில் ஸெர்விஸ் பரீக்ஷையிற்றேறி உயருத்தியோகங்களி லிருந் தார். இவர் ஸங்கீதத்திலும் கவி செய்வதிலும் தேர்ந்தவர். இவருடைய காவியங்கள், கம்பர், காளிதாஸர், ஷேக்ஸ்பியர்முதலானவர்களுடை ய காவியங்களுக்கொப்பாக விருக்கின்றன. இவ ருடைய சரித்திரத்தைப்பற்றி டில்லியில் வசிக் கும் ரெவரெண்ட் சி.எப். அண்ட்ரூஸ் அவர்கள் வைஸ்ரிகல் லாட்ஜில், இராஜப் பிரதிநிதியவர் கள் முன்னிலையில் ஒரு பிரசங்கம் செய்தார். அதிலிருந்து அவருடைய மனோசக்தி நன்றாக வெளியாகிறது. ரவியேந்திரநாத் டாகோர் அவர்கள் பாலியம் முதற்கொண்டு பிரகிருதி வித்தையிற் பிரியமுள்ளவர். "பிரகிருதியினுண் மையில் பரமனைக் காணலா"மென்பது இவர் விஷயத்தி லுண்மையாகவே பலித்தது. ஏனெ னில் பிரகிருதி வஸ்துக்களின் அழகைப் பார் த்துமகிழ்ந்து அவைகளின் இரகஸியத்தை யுணர்ந்துகொண் டிருக்கையில் இவருக்கு திடீ ரென்று தூரியதரிசனம் கிடைத்தது. அதுமு தல் கண்திறக்கப் பெற்றவரானார். முதலில் காவியாலங்காரங்க ளோடுமட்டும் எழுதிவந்த வர், பிந்தி தனக்கு தீர்க்கதரிசனம் உண்டாக உண்டாக உண்மையை உணர்வதில் ஊக்கம் பிறந்தவராய், உள்ளுணர்வால் தானுணர்ந்த னுபவித்த உண்மையை வார்த்தைகளால் வெ ளியிடத் தலைப்பட்டார். உள்ளுணர்வு முதிர முதிர இவருடைய வாக்குசக்தி யதிகரித்தது. வரகவியென்னும் பேர்வாங்கும்படி, நினைத்தது நினைத்தவண்ணம் வார்த்தைகளில் விளங்க எழுதலானார். தத்துவார்த்தங்களை யெல்லாம் கவி சாதுர்யத்தால் வெளியிட்டெழுதலானார். தத்துவ தரிசனமானபின் தத்துவங்களுக்கப்பா லுள்ள கடவுளையே துதித்துக் கவிசெய்யலா னார். இப்பொழுது அவர் எங்கும் கடவுள்திருக் கூத்தையன்றி வேறொன்றுங் காணாதவராய் எதைத் தொட்டாலும் அது கடவுளின் விபூதி யாக விளங்க அப்படியே திருவருளால் அதைக் கவியாகஎழுதிவருவாராயினர். இவருக்குவயது ஆகஆக் ஆத்மஞானத்தில் மனம் அதிகமாகச் சென்றது. கடைசியில் இவருடைய இன்னுயி ர்க்காதலியும் இருகுழந்தைகளும் இறந்தார்கள். இவரும் அவர்களோடுகூட இறந்தவராய் மர ணத்தின் இரகஸியத்தை யறிந்துகொண்டார். முதலில் இவர் ஆறாத்துயரிலமுழ்ந்தியிருந்தாலும் உண்மையுணர்ந்து கொண்டபின்பு, பகவான் தன் மனைவியையும் குழந்தைகளையும் கொண்டு போனது தனக்குப் பேராசிர்வாதமாயிற்று என்று சொன்னார். பிரகிருதியி னுண்மை யைத் தானுணர்ந் தனுபவிப்பதன்றி பிறருக் கும் போதிக்கவேண்டி ஒரு வித்யாலயம் ஸ்தா

பிக்கலானார். "எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்" என்றபடி அவருடைய எண்ணமும் அவ்வெண்ணங்களைத் தெரிவிக்கும் எழுத்தறிவும் அவருக்கு ஞானக்கண்ணைக் கொடுத்தது.

ரவியேந்திரநாத் டாகோர் அவர்கள் இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய தேசங்களுக்கும் யாத்திரைபோய் வந்திருக்கிறார். எங்குபோனாலும் மன்குலமொன்றே: மன்னுயிர் ஒன்றே. அஃதேபோல இன்பமும் துன்பமும் ஒன்றே. மனவிருள் போக்கின் அகவிருள் நீங்கும்.

இவருடைய மனவிருள் நீங்கித் திருவருள் உதயமாகவும், எல்லாவற்றையும் திருவருள் நோக்காகவே பார்வையிடலானார்.

"ஒன்றிநின்றன் றுணர்வழிந் துள்ளொளியானபின், அங்கு மிங்கு மெங்கு மிதுவலால் வேறொரு அதிர்சயம் காண்கிலேனே" யென்றபடி எங்கும் திருவருட் கூத்தன்றி வேறொன்றையும் காண்கிலராகி அறிவாநந்தத்தை விட்டு வேறு ஆனந்தமில்லாராகி உலகுக்கோர் மணிவிளக்காய் இருந்தொளிர்ந்து வருகிறார்.

இப்படிப்பட்டவரொருவர் தோன்றினமையால் மேற்றிசையாரும் கிழ்த்திசையாரும் மனமொத்துவாழ இடமுண்டாயிருக்கிறது. நமது இராஜப்பிரதிநிதி லார்ட் ஹார்டிஞ்ச் அவர்கள் இவருடைய திவ்ய சரிதையைக்கேட்டு ஆனந்தித்து இவரை ஆசியா கண்டமுழுமையிலும் கவிசக்ரவர்த்தி யென்னலாமென்று வியந்து கூறி இவருடைய கிரந்தங்களிலெல்லாம் ஜீவகாருண்யம் நிறைந்திருப்பதைப்பற்றி மிகவும் சிலாகித்துப் பேசினார்.

இவரைப்போல் தோன்றி கவிவாணர் எனப் பேர் பெற்றவர்கள்:—மைக்கேல் தோரு தத்தா, ஹேமசந்திர பானர்ஜி, நவீனசந்திர சேனர்; கதைகளெழுதுவதில் பங்கிம் சந்திர சட்டர்ஜியைப்போல் பிரக்யாதி பெற்றவர் வேறுயாருமில்லை. இப்படிப்பட்ட மஹான்கள் தோன்றியுழைத்ததால் வங்காளமாதுதிருப்பள்ளியெழுச்சி கொண்டாள். அதுவே இந்தியாவின் திருப்பள்ளியெழுச்சிக்குக் காரணம்.

ஓம்தத்ஸத்.

:(++):

## A Visit to the Madras Marine Aquarium.

## சென்னை, நீர்வாழும் ஜந்துக்கள் காட்சிசாலை.

சென்னை சமுத்திரக்கரையில் ப்ரஸிடென்ஸி காலேஜுக்கு எதிரில், நீர்வாழும் ஜந்துக்கள் காட்சிசாலை யொன்று புதிதாய் கட்டப்பட்டிருக்கிறது. இது 1909ஆ அக்டோபர்மீ 21உ கட்டி முடிந்து காட்சிக்குத் தயாராயிருந்தது. அதுமுதல் அந்தக் காட்சி சாலைக்குள் அனேகம் மீன் வகைகளும், கடற்பாம்புகளும், ஆமைகளும் இதர நீர்வாழும் ஜந்துக்களும் பார்ப்பதற்கு அற்புதமாய் அங்கே வசித்துவருகின்றன. இந்தமாதிரி ஸ்தாபனம் இந்தியாவில் இதுதான் முதல்முதல் ஏற்படுத்தப்பட்டதெனத் தெரிகிறது. இதை யேற்படுத்தினதின் கருத்து இரண்டு. ஒன்று: சென்னை கடற்கரை யோரமாயுள்ள மீன் வகைகளை உயிரோடு பிடித்து அவை நீரில் வாழ்கிறமாதிரி ஜனங்கள் பார்க்கக்கூடியதாகக் காட்டவேண்டுமென்பது. மற்றொன்று: சென்னைக் கடற்கரையோரமாயுள்ள மீனினங்கள், இதர நீர்வாழும் ஜந்துக்கள், இவைகளைப்பற்றி சாஸ்திர ரீதியாய்க்கற்க விரும்புகிறவர்களுக்கு அனுகூலமான வசதி யேற்படுத்த வேண்டுமென்பது.

கடற்கரை மணலில் கட்டியிருக்கும் அழகான சிறியகட்டடம் மேற்குப்புறமான வாசற்கதவுள்ளதாயிருக்கிறது. உள்ளே நுழைந்ததும் தரை நன்றாகத் தளம் செய்யப்பட்ட விசாலமான கூடமொன்றிருக்கிறது. அதன் மத்தி

யில் ஒரு மீன்குள மிருக்கிறது. அதிலே ஜலத்தில் முளைக்கும் பாசிகள் புல்கள் வைத்துக் காக்கப்பட்டு வருகின்றன. அவையிடையே சென்னையிலுள்ள நல்லதண்ணீரில் வாழும் ஜந்துக்கள் சில இருக்கின்றன. அதில் வசிக்கும்ஜந்துக்களில் நல்லதண்ணீர் ஆமையொன்று. இன்னும் பல மீனினங்களும் அங்கே வசிக்கின்றன.

அக்குளத்துக்கு இருபுறத்திலும், கண்ணுடியினுல் மூடப்பட்டுள்ள தண்ணீர்த் தொட்டிகள் பக்கத்துக்கு ஐந்தாகக் கட்டப்பட்டிருக்கின்றன. இந்த தண்ணீர்த்தொட்டிகள் மேலே வெளிச்சம்பட விலாப்புரத்திலிருந்து பார்க்கும்படியாக அமைக்கப்பட் டிருக்கின்றன. இவற்றில் நிறைந்துள்ள ஜலம் கடல்நீர். கடலிலிருந்து இக்காட்சிசாலைக்குப் பின்புறத்திலுள்ளமூடின கேணியொன்றுநிறையக் கடல்நீர் நிறப்பி, அதிலிருந்து தண்ணீர்த் தொட்டிகளுக்குப் போகும் வழியில் வடிக்கட்டும் யந்திரமொன்று அமைக்கப்பட்டிருக்கிறது. அதிலே வடிக்கட்டப்பெற்ற தண்ணீர் இந்தக் குளங்களுக்குட்போய் விழுகின்றது.

மீன்கள் வசிப்பதற்குத் தண்ணீரில் பிராணவாயு நிரம்ப இருக்கவேண்டும். அதற்கு வாயுயந்திரம் ஒன்றுவைத்து அதனுல் வாயுவை ஜலத்தில் புகும்படி 'பம்பு' செய்கிருர்கள். இந்த வாயுவானது ஒருயந்திரத்தி லடைக்கப்பட்டு அதிலிருந்து மீன்குளங்களுக்குச் செல்கிறது. சிறு குழாய்கள் வழியாகவந்து பெரிய மெழுகுவர்த்திபோல் செய்யப்பட்ட காற்று வடிக்கட்டும்யந்திரங்களின் வழியாக சிறுகுமிழிகளாகக் கிளம்பி காற்ருனது ஜலத்தில் பரவுகிறது. இப்படி இரவும் பகலும் சற்றுநேரத்துக்கொருதரம் காற்றப்போகும்படி 'பம்ப்' அடித்துக் கொண்டிருக்கிருர்கள். இல்லாவிட்டால் தண்ணீர்த் தொட்டிகளிலுள்ள மீன்கள் பிராணவாயுவின் குறைவால் செத்துப்போய் விடுகின்றன.

கடலில் வசிக்கிறதுபோலவே இத்தண்ணீர்த்தொட்டிகளிலும் மீன்கள் வசித்து வந்தாலும், இவ்வளவு நெருக்கமாக விருந்து கடலில் அவதிப்படவேண்டியதில்லை. ஆனுல் மீன்காட்சிச்சாலையில் அவை தீராப்பொறியாக நெருக்கமான தொட்டிகளிலேயே வசிக்கவேண்டியிருக்கிறது. ஆகையால் தொட்டிகள் நல்ல காற்று நிறைந்தனவா யிருக்கவேண்டி யிருக்கிறது. அப்படியே கட்டடமும் காற்று நிறைந்ததா யிருக்கவேண்டி யிருக்கிறது.

கட்டடத்தின் கீழ்க்கோடியில் கடலில் வசிக்கும் ஆமைகள் இருக்கும் குளமொன்றிருக்கிறது. மீன்தொட்டிகளில் நிறைக்கப்பட்ட ஜலத்தை வடிக்கட்டி மிடத்துக்குக் கொண்டுவந்து அங்கிருந்து மறுபடியும் தொட்டிகளுக்குப் பாயும்படியான ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

அந்த மீன்காட்சிசாலையைப் பார்க்க நானும் ஒரு நண்பருமாகப் போனேம். அன்று, சாயங்கால வேளையாதலால், ஆளுக்கு அரையணுதான் கொடுத்தோம். அங்கே வந்திருந்த ஜனங்களும் ஆணும் பெண்ணுமாய் 50-60 பேர்களிருப்பார்கள். அவர்களெல்லாரும் மீன்கள் அழகாய் தண்ணீர்க் குளங்களில் வளையவருவதைப் பார்த்து ஆச்சரியப்பட்டு நிற்பதும் ஒருவரோடொருவர் பேசிக்கொள்வதும் வேடிக்கையா யிருந்தது.

"அடியே அக்கா! இந்தாலே பாரடி நீர்ப்பாம்பை!" என்ருள் ஒரு குமரி. அவளுடன் நின்ற பையன், "அது நல்ல தண்ணீர்ப் பாம்பல்ல. கடற்பாம்பு, தெரியுமா! அதைத் தொட்டால்கூட போதும்: விஷம் அதற்கு அவ்வளவு அதிகமடியம்மா!" என்ருன் அங்கே அச்சுப்போலெழுதியிருக்கும் அதன் விர்த்தாந்தத்தைப் பார்த்துவிட்டு,

"அந்தத் தண்ணீர்க்குள்ளே மலைக்குகைபோ லிருக்கிறதே, அதற்குள் எத்தனை பாம்பு தலையைத் தலையை நீட்டிக்கொண்டு வாயைத்திறக்கின்றன பாரடீ" யென்ருள் இன்னெரு மங்கை.

"அது என் அப்படி வாயைப்பிளக்கிறது தெரியுமா? அந்த ஜந்துக்களெல்லாம் மூச்சு விடுகிற மாதிரிஅப்படித்தான்!" என்றான் கூட விருந்த ஒரு பையன்.

இரண்டாவது தொட்டியில் அனேகவித மீன்கள் ஓடியாடி உலாவிக் கொண்டிருந்தன. மூன்று, நான்கு, ஐந்தாவது தொட்டிகளிலும் அப்படியே பலவர்ணமான மீன்கள் வசித்துக் கொண்டிருந்தன, அவைகளைப்பார்க்க வெகு அழகாயிருந்தன. அவை யோடியாடித் திரிந்தது "தேவடியாள் மினுக்குப்" போலிருக்கிறதென்றான் ஒரு பையன். வடபுறம்விட்டுத் திரும்பினதும், கீழ்புரத்தில் பெரிய கடல்ஆமைகள் சில ஒரு அழுக்குக்குட்டையில் நீந்திக்கொண்டிருந்தன. அந்த ஆமைகளின் பேரும் ஜாதி விவரமும் அங்கே யெழுதி யொட்டப்பட்டிருந்தது. அப்படியே பற்பல வகை மீன்களும் சித்திரப்படமெழுதி அதன் கீழ் பேரெழுதப் பெற்றிருந்தன. இங்கிலீஷில் மட்டுமன்றி தமிழிலும் பேர்கள் எழுதப்பட்டிருந்தன. தென்புறமுள்ள தொட்டிகளில் முதல் தொட்டியில் பல வர்ணமான மீன்கள் சிலவிருந்தன. அவை மூன்று நான்கடி விலாசத்தில் வளையவந்தது 'நிருத்தம்' செய்வதுபோல் வேடிக்கையாயிருந்தது. அடுத்துள்ள மூன்றாவது தொட்டியில் கூட்டம் கூட்டமாய் வசிக்கும் மீன்வகை யொன்றிருந்தது. அந்த மீன்கள் கூட்டமாய்க்கூடி ஜனங்களை வேடிக்கை பார்த்தது மிகவும் வேடிக்கையாயிருந்தது. இப்படி ஒருமணிநேரம் உல்லாஸமாய் வேடிக்கை பார்த்தபின்பு, அதை விட்டு வந்தோம். வந்ததும் இந்த அதிசயத்தை யெல்லாருக்கும் தெரியச்சொல்லவேண்டு மென்று தோன்றியது. ஆதலாலுடனே யுட்கார்ந்து **விவேகசிந்தாமணிக்கு இதை யெழுதலானேன்.**

**குமுதவல்லி.**

—:(*):—

# DAYANANDAR.

## Chapter. 2.

## தயாநந்தர்.

அத்தியாயம் II.

கூந்தலழகி.

போன அத்தியாயத்தில் சொல்லப்பட்ட அந்த செஞ்சடையன் கொலைக்கு இரண்டாம் நாள் அதாவது திங்கட்கிழமை காலையில் தயாநந்தர் * தனது பங்களாவில் உட்கார்ந்துக் கொண்டு சனிக்கிழமை ராத்திரி நடந்த கொலையைப்பற்றி ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தார். போலிஸார் வண்டிக்காரன் மூலமாய் கொலையைப்பற்றி கேள்விப்பட்டு பிரேதத்தை சோதனைக்காகஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோனார்கள். தயாநந்தர் மரண விசாரணைக்கு ஒரு சாக்ஷியாக கூப்பிடப்பட்டிருந்தார். தயாநந்தருக்கு அவர் செஞ்சடையனைப் பார்த்ததுமுதல் அவனை கவனிக்க வேண்டுமென்று தோன்றிய அவாவானது ஜாஸ்தியாயிற்று. அவர் கொலை செய்யப்பட்டவனையும் கொலைசெய்தவனையும் கண்டுபிடிக்க விரும்பினார். தயாநந்தர் 'இருளப்பன் சந்துக்கொலை' என்று பேர் பெற்ற நாடகத்தை தூரத்திருந்து வேடிக்கைபாராமல் அந் நாடகத்தில் ஒரு முக்கிய பாத்திரமாக விருக்க விரும்பினார்.

தயாநந்தர் இம்மாதிரியாக காலைப்பொழுதைப் போக்கிக் கொண்டிருக்கும் பொழுது தோட்டக்காரன் வாசலில் ஒருவர் வந்திருப்பதாய் சொல்லி வந்தவரின் பெயரடங்கிய ஒரு சீட்டைக் கொடுத்தான். அந்தச் சீட்டில் "சுந்தரம்" என்று எழுதியிருந்தது. தயாநந்தர் பெயரை மாத்திரம் அடங்கியுள்ள சீட்டினால் அவர் ஒரு உத்தியோகஸ்தராயாவது அல்லது அநேகமாய் ஏதாவது ஒரு கௌரவமான குடும்பத்தை சேர்ந்தவராயாவது இருக்க வேண்டும் என்று தெரிந்துகொண்டு, வந்திருப்பவரை அழைத்துக்கொண்டு வரும்படி சொன்

* முன் அத்யாயத்தில் இரண்டொரு இடங்களில் 'தயாநந்தர்' என்பதற்கு பதிலாக 'வசந்தர்' என்றும், ஒரு இடத்தில் 'நயானந்தர்' என்றும் பிழையாக அச்சிடப்பட்டிருக்கிறது. அதை தயவுசெய்து திருத்திக் கொள்ளக் கோருகிறோம்.

ணர். சிறிது நேரத்திற்கெல்லாம் பருத்து கொழுத்தவரும் திடகாத்திரருமான ஒருவரை உள்ளே அழைத்துக்கொண்டு வந்தான். அவர்தான் சுந்தரம். அவரைப் பார்த்த மாத்திரத்தில், அவர் மனிதர்கள் அகத்திலிருப்பதை அறியக்கூடியவர் என்றும் எப்பேர்ப்பட்ட சமயத்திலும் தன் மனதிலிருப்பதை மற்றவருக்குக் காட்டாமல் மறைக்க கூடியவரென்றும் அறியலாம். மௌனமாயிருந்த இருவர்களில் சுந்தரம் முதலில் வாய்திறந்து பேச ஆரம்பித்தார்.

"தயாநந்தரே, நீர் என்னை எதிர்பாரா திருக்கையில் இருளப்பன் சந்துக் கொலைவிஷயமாக நான் இங்குவந்தேன்" என்றார் சுந்தரம்.

"போலீஸிலிருந்தா?"

"ஆம்! உள்ளதை யுள்ளபடி சொல்லவேண்டுமானல் துப்பறியும் (C. I. D.) போலீஸ் இலாகாவிலிருந்து இருளப்பன் சந்துக் கொலையைப்பற்றி விசாரிப்பதற்காக என்னை அனுப்பியிருக்கிறார்கள்" என்றார் சுதந்தரம்.

"ஆனல் நிரம்ப சந்தோஷம்: ஒரு தயவு செய்யவேண்டும்." என்றார் தயாநந்தர்.

"தயவா! தயவு செய்வதில் எனக்கு மிகவும் பிரியம்! கேட்டது கொடுத்தாய்விட்டது."

"சரி! அதாவது, நான் உமக்கு இந்த விஷயத்தில் ஒத்தாசை செய்ய அனுமதிவேண்டும்."

இதைக்கேட்க சுந்தரத்துக்கு ஆச்சரியமாயிருந்தது. தயாநந்தரைப் போன்ற கனவான் இருளப்பன் சந்துக் கொலையொத்த இந்த விஷயங்களைத் தலைமேல் போட்டுக்கொள்ள விரும்புவதின் காரணம் தெரியவில்லை. "ஓ! மற்ற எல்லா விஷயங்களையும் விட ஒரு கொலையைக் கண்டுபிடிப்பது மிகவும் கஷ்டம்." என்றான்.

சுந்தரம்தான் மாசா மாசம் சம்பளம் வாங்குகிற கடன் இழவுக்காக அந்தக் கொலை விஷயத்தைத் தலைமேல் போட்டுக்கொண்டாரேயொழிய வேறொன்று மில்லை.

சுந்தரம் இந்த விஷயங்களில் கேட்டுக்கொண்டாலொழிய தானக நுழையமாட்டார். ஆனல் ஒருதரம் நுழைந்தால் காரியத்தைச் சாதித்துக்கொண்டு திரும்பி வருவாரேயொழிய 'என்னல் முடியவில்லை' என்று சொல்ல மாட்டார். இப்பொழுது அதிகாரிகள் உத்திரவின் மேல் வந்திருந்தார். அவர்தான் வந்தாரென்ருல் தயாநந்தர் தானும்கூட வருகிறேனென்பானேன்?—இந்த மாதிரியாக சுந்தரம் யோசனைசெய்வதை அறிந்த தயாநந்தர்: "சுந்தரம், என்ன யோசிக்கிறீர்? நான் கதைகள் எழுதிக் காலத்தைப் போக்குகிறவன் என்பதை நீர் அறியீர்போலும்! அவைகளில் அநேகமாய் எல்லாம் இக்கொலையைப்போல இந்த உலகத்தில் நடந்தவைகளாய் என் கற்பனையோடு சேர்ந்ததாய் இருக்கும். இந்தக்கொலையில் எனக்கு ஏதாவது எழுதுவதற்கு அகப்பட்டால் இதை ஒரு கதையாக எழுதலாம் என்பதே என் கருத்து." என்றார்.

கடைசியில் சுந்தரம் தயாநந்தருக்கு அவர் சுந்தரத்தின் சொற்படி கேட்க ஒப்புக்கொண்டதின்பேரில் அனுமதி கொடுத்தார். இந்த மாதிரியாக இப்பொழுது இந்தக்கொலையைக் கண்டுபிடிக்க இரண்டுபேர்கள் தலைப்பட்டனர். அவர்கள் சுந்தரமும் தயாநந்தரும்.

"நாம் இப்பொழுது செய்யவேண்டியது இந்த செஞ்சடையனைக் கொன்றது யார் என்று கண்டுபிடிக்க வேண்டியதுதானே?" என்றார் தயாநந்தர்.

"இல்லை! அதுஅல்ல, செஞ்சடையனைக்கொன்றது யாரென்பது எனக்குத் தெரியும்!"

தயாநந்தருக்கு அது இடிஇடித்தாற்போலிருந்தது. "'கொன்றவன் யாரென்பது தெரியுமா? என்ன!" என்றார் தயாநந்தர்.

"ஆம் தெரியும்! அகள் கூந்தலழகுடைய ஒரு ஸ்திரீ."

"நிச்சயமாய்த் தெரியுமா"

"இப்பொழுது இருக்கிற சாக்ஷியங்களினல் அப்படித்தான் சொல்ல வேண்டியிருக்கிறது."

"நிச்சயமாய்த் தெரியுமா? எப்படித்தெரியும்? அவளைக் கைதுசெய்து விட்டீரா? ஜெயிலில் வைத்தாய் விட்டதா?" என்று தயாநந்தர் மூச்சு விடாமல் கேள்விகள் கேட்டார்.

சுந்தரத்தின்பாடு திண்டாட்டமாகப் போயிற்று. பிறகு வெகு சிரமத்துடன் தயாநந்தரைப்பார்த்து அவருடைய கேள்விகளை, ஒவ்வொன்ருய்க் கேட்கும்படிச் சொன்னர்.

தயாநந்தர் அதற்கு சம்மதித்து—"அவளைப் பிடித்தாய்விட்டதா?" என்ருர்.

"அவள் சட்டத்தினுடைய அதிகார எல்லையைக் கடந்து போய்விட்டாள். அதாவது, இறந்துபோய் விட்டாள்." என்ருர் சுந்தரம்.

"என்ன! இறந்தாபோய் விட்டாள்?" என்ருர் தயாநந்தர்.

"ஆம்! கொலை செய்யப்பட்டு!"

"என்ன! இரட்டைக் கொலையா"?

"ஆம்! செஞ்சடையன் கொலைசெய்யப்பட்ட ஒருமணி நேரத்திற்குள், அதாவது, சனிக்கிழமை ராத்திரி இரண்டு மணிக்குள்."

"இரண்டு மணிக்குள், என்று சொல்வதெல்லாம் உமது கற்பனை என்று தோன்றுகிறது."

சுந்தரம்: "ஆம், அப்படித்தான்! எல்லாம் உத்தேசம்தானே! நாளைக்கு மூன்றுமணிக்கு நடக்கப்போகிற மரணவிசாரணையில் ஏதாவது தெரிந்தாலொழிய,—"

"ஸ்திரீயின்தேகம் எங்கே காணப்பட்டது?"

"கூவம் ஆற்றங்கரையில் தண்ணீருக்குப்போகும் படிகளில்"

"ஓ! கொலையாளி பிரேதத்தை ஆற்றில் எறிந்து விடப் பார்த்தாப்போலிருக்கிறது!" அப்

"ஆம்! அப்பொழுது ஏதோ சந்தடியரவம் கேட்டு அப்படியே போட்டுவிட்டுப் போயிருக்கிருன்!"

"யார் அதைப் பார்த்தது?"

"ஒரு குடியானவன் கைகால் அலம்பக் காலை ஆறு மணிக்குப்போனனும். அப்பொழுது பார்த்து போலீஸாருக்கு ஸங்கதி தெரிவித்தான். அந்த சமாசாரம் வந்தபொழுது நான் செஞ்சடையனைப் பரிசோதித்துக்கொண்டிருந்தேன். இதைக்கேட்டதும் அதைப்பார்க்க ஓடினேன்."

"நீர் ஓடினதற்கு ஏதாவது காரணமுண்டோ?"

"ஆகா!" என்றுசொல்லித் தன்பையிலிருந்து ஒரு புட்டவையின் கிழிந்த முந்தாணி யொன்றை மேஜையில் எறிந்தார் சுந்தரம்.

தயாநந்தர் அதை எடுத்துப் பார்த்துவிட்டு சுந்தரத்தைப் பார்த்தார்.

"இந்தத்துணி செஞ்சடையனின் இடதுபையிலிருந்தது. அதைப் பார்த்ததும் செஞ்சடையன் தன்னைக் குத்தவந்தபொழுது அதைத் தடுப்பதற்காக எதிரியின் துணியைப் பிடித்துக் கொண்டு எதிரியைத் தள்ளப்பார்த்திருக்கிருன். அப்பொழுது முந்தாணி கிழிந்து வந்து விட்டது என்றும் அவனைக்கொன்றது ஒரு ஸ்திரீ தானென்றும் நினைத்தேன்" என்ருர் சுந்தரம்.

"சரிதான்! ஆனல் இந்த ஸ்திரீதானென்று என்னமாய் தெரியும்?" என்ருர் தயாநந்தர்.

"அது சொல்லமுடியாது. அப்படி யிருக்கலாமென்று மனதில் பட்டது! அதனல் போனேன்."

"எனக்கும் அப்படித்தான் பட்டிருக்கும்; அங்கு போனதில் என்ன தெரியவந்தது?" என்ருர் தயாநந்தர்.

"நான் அங்குபோய்ப் பார்த்ததில் அந்த ஸ்திரீயின் முந்தாணியில் ஒருமுழம் கிழிந்தி

ருந்தது." இந்தத்துணியும் ஒருமுழம் இருக்கிறது. துணியும் ஒரேவிதமான துணிதான். ஆகையினல் இவள்தான் கொலை செய்திருக்க வேண்டுமென்று தீர்மானித்தேன் என்ருர் சுந்தரம்.

"எல்லாம் சரிதான். அவனைக்கொன்றது யார் என்று தெரியுமா ?" என்ருர் தயாநந்தர்.

"அதுதான் கண்டுபிடிக்கவேண்டும் அவள் சரீரத்தில் ஆளை கண்டுபிடிக்க ஒரு அடையாளமும் இல்லை."

"வன் செஞ்சடையனைக் கண்டுபிடித்தால் தானே எல்லாம் தெரிகிறது" என்ருர் தயாநந்தர் "ஆம். அவன் மாறுவேடம் பூண்டிராவிட்டால் சரிதான். மாறுவேடம் பூண்டிருக்கிருனே"

"மாறு வேடமா?"

"ஆம். செஞ்சடை எல்லாம் பொய்மயிர். வயது 50 அல்லது 60 இருக்கலாம். அவன் மயிர் நரைமயிர். பணக்காரன் போல தோன்றுகிறது. அவன் குடுத்துணியில் மாத்திரம் 'ஜ. மோ.' என்கிற எழுத்துகள் இருக்கின்றன. அது செய்யப்பட்ட கடையின் பேர் இருக்கிறது.

"அது அப்துல்லாசாயபு கடை அவன் கெட்டகாரியத்துக்குப் போகப்பட்டவனல்லன். மேல் சொக்காய் முதலியவைகளை மாற்றினனே ஒழிய உள் துணிகளை மாற்றவில்லை. பாவம் தான் இன்னெரு நிமிஷத்தில் கொல்லப்படப்போகிறது தெரியவில்லை. ஆனல் பேரை சீக்கிரம் கண்டு பிடித்துவிடலாம். பிறகு அவன் கொல்லப்பட்டதின் காரணத்தையும் கண்டு பிடித்துவிடலாம். இப்பொழுது இரண்டு உளவுகள் இருக்கின்றன. அவைகளைக் கொண்டுதான் நம் வேலையை ஆரம்பிக்கவேண்டும் என்ருர் சுந்தரம்.

"அவைகள் என்ன?"

"ஒன்றுதான் அந்த 'ஜ. மோ' என்கிற எழுத்துக்களும் அந்த குடுத்துணியைத் தைத்த கடையின் பெயரும் கடையிலிருந்து செஞ்சடையனின் உண்மைப்பெயரை அடையலாம். பிறகு அவன் குடும்பத்தில் அவன் பூர்வோத்திரத்தைப்பற்றி விசாரித்தால் அவன் கொலைசெய்யப்பட்டதற்கு காரணம் தெரியவரலாம்" என்ருர் சுந்தரம்.

"சரிதான் இன்னென்று?"

"அந்த இரண்டு பதுமைகள்."

"என்ன? பதுமைகளாவது!"

"ஆம் சொல்லுகிறேன் அவசரப்படாதேயும்."

—:(*):—

## How to be young though old.

*Motto:*—"Now, more than ever, it is the day of the old man with vitality"—Sir George Birdwood.

"At 81, he declares that the old man of vitality is the youngest man in the world."

## சிரஞ்சீவியாகவிருப்பது எப்படி?

"வயதுமிகவானுலும் வார்த்திபந்தான் வந்தாலும்
'வாசிவசம்' உண்டானல் வாலையம்மைகிருபையாலே
வாழலாம் தரணியிலே சிரஞ்சீவியாகமிக்க!"

—ஸித்தர்வாக்கு.

---

அறிவு என்ருலும் ஆத்மா என்ருலும் ஒன்று. மனிதன் அறிவுள்ள ஜீவன். அதாவது ஆத்மசக்தியோடு கூடினவன். ஆத்மாவுக்கு அறிவு, ஜீவன், ஜடம் என மூன்று சக்திகளுண்டு. முதலாவது சித்சக்தி, இரண்டாவது ஜீவசக்தி மூன்ருவது ஜடசக்தி. "சித்திலாதபோதுஜீவன் இல்லையில்லை யில்லையே!" என்ருர். அப்படியே ஜீவனில்லாதபோது ஜடமாகிய தேஹமும் இல்லையென்பது திண்ணம். மனிதன் இறந்து போனல் ஜீவனில்லாமல் தேஹமாத்திர மில்லையா? என்று கேட்கலாம். செத்த தேஹத்தைப் போல் உயிருள்ளது வேறெதுவுமில்லை. ஏனெனில் பிந்து நாதத்திலிருந்து முறையே படிப்படியாக இறங்கிக் கட்டின தேஹத்தைப் பிரிக்கும் சக்தியொன்று செத்த தேஹத்திலிருக்கிற

தல்லவா? அதற்கு உயிரில்லாவிடில் தேஹத்தை அக்கக்காய்ப் பிரித்துப் பூதங்களைக் கரைத்து ரூபநாசம் உண்டாகச் செய்வது எப்படி? உயிருள்ள ஏதோ ஒரு சக்தியுடம்பில் இருப்பதனால்தானே கட்டுண்ட தேஹம் பிரிபட்டுப் போகிறது.

* * *

மனிதன் அறிவுள்ள ஜீவன்என்று சொன்னோம். அந்த அறிவு மனதில் பிரதிபிம்பிப்பதால் அவனுக்கு பேதஞான முண்டாகிறது. அந்த பேதஞானமே சித்தவிருத்தி யாகிறது. சித்தவிருத்தியினால் பேத பாவனைகள் அதிகரித்தாலும்பாவனைமாத்திரத்தினால் அவன் ஒன்றைவிட் டொன்றைப் பற்றவும், பற்றின மாத்திரத்தில் அதுவாகவும் அவனுக்கு சக்தியிருக்கிறது. அந்த சக்தி உண்மையான அறிவின் சக்தி. அதையே ஆத்மசக்தி யென்றும் சொல்லுவர். அந்த சக்தி "அது நான்" "இது நான்" என்று பாவித்து பாவனை மாத்திரத்தால் அது, இதுவாகி, தன்வலையில் தானே சிக்கியே எட்டுக்கால்பூச்சிபோல் அவன் தன் சொந்த பாவனை சிருஷ்டிகளினால் கட்டுண்டு உழல்கிறான்.

* * *

"தேஹம் நான்" என்கிறபாவம் முதிர்ந்தால் அறிவுருவான ஆத்மனும் மனிதன் அழியும் தேஹனாகிறான். இந்த தேஹத்துக்கு இந்தக் கலியுகத்தில் குறித்தவயது 100. இதற்குப் பூர்ணஆயுஸ்என்று பெயர். இவ்வுலகில் தேஹமெடுத்த ஜீவன்களில் பெரும்பாலர் அற்ப ஆயுவில் தேஹத்தைவிட்டுப் போவது ஏன்? அதற்குக் காரணம் பல்பிணி, மூப்பு, மரணம் என மூவிதக்காரணம் சொல்கிறார்கள். இவைகளைச்சற்று ஆராய்ந்து பார்ப்போம்.

* * *

பிணியென்பது என்ன? பேணுதல் தவறினால் உண்டாவது பிணி. பேணுதல் என்பது தர்ம ஸம்பமாக விரும்பி ஓம்புவதற்கே பொருந்தும். உலகத்தில் தேஹத்தை விரும்பி தேஹாபிமானம் மிகுந்தவர்களுக்குத்தான் நரை திரை மூப்புப் பிணியெலாம் அணுகுகிறது. ஏன்? தேஹதர்மத்தை யுணராது தேஹத்தில் மூட அபிமானம் வைப்பதால் இவ்வளவு சங்கடமும் நேரிடுகிறது. ஊழ்வினைப் பயனால் வரும் நோய்கள் போக தேஹதர்மம் தெரியாமல் நடந்துகொள்வதால் வரும் வியாதிகள் அனந்தம். இவைகளாலேயே பெரும்பாலார் அற்பாயுஸாய்ப் போகிறார்கள்.

* * *

"மீதூண் விரும்பேல்" என்ற ஆப்த வசனத்தை மீறிநடப்பவர்கள் எத்தனைபேர். சோற்றுக்கில்லாது பட்டினியால் சாகிறவர்களைவிட "மீதூண்" காரணமாக சௌக்கியம் கெட்டு நடைப்பிணமாய்த் திரிந்து சாகிறவர்கள் தொகை அதிகம்.

* * *

இரண்டாவது "சோம்பித் திரியேல்" என்ற ஆப்த வாக்கியத்தை மீறி நடந்து பல்பிணி மூப்புக்காளாகி அற்பாயுவில் போகிறவர்கள் தொகை அனந்தம்.

* * *

"காலத்தே பயிர்செய்" என்றபடி இளமைப் பருவத்தில் தானே நற்குண நற்செய்கைகள் அமையப்பெறப்பழகாமல் காலத்தை வீண்போக்கிப் பிந்தி "வரும்வழி போம்வழி மாயாவழியறியாமல்" தயங்கித் தவிக்கிறவர்கள் தொகை அனந்தம்.

* * *

இப்படி யெல்லாம் தவிப்பவர்களை விட்டொழித்து பூரணாயுஸாயிருந்தவர்கள், இருப்பவர்கள் சரித்திரத்தை ஆராய்ந்து பார்த்தால், அவர்கள் கடைப்பிடியாகப் பிடிக்கும் வழியொன்றேயெனவிளங்கும். அது என்னவென்றால்:—

"பிழைக்கும்வழி உழைக்கப் பழகுவதே."

தேஹத்தாலும் மனத்தாலும் இடைவிடா துழைக்கிறவர்களுக்கு வியாதி வருகிறதில்லை. ஆயுராரோக்கியம் விர்த்தியாய் கடைசிவரையில் சுத சரீரிகளாயிருந்து தேஹத்தை விடுகிறார்கள். "உழைக்கப் பழகுவதிலும்" கர்மத்தின் மர்மமறிந் துழைத்தால் மனத்தழுக்கு நீங்கி புத்தி விசாலிக்கும். அநுபவம் முதிர முதிர அறிவு பெருகும். பேரறிவுண்டானால் ஆத்மவிலாஸம் விளங்கும். "ஆத்ம விலாஸம்" என்றால் அதில் எத்தனையோ பாக்கியங்கள் அடங்கியிருக்கின்றன.

* * *

ஸர்ஜியார்ஜ் பர்ட்வூட், ஸர்சார்லஸ் டப்பர், லார்ட் வெய்மிஸ், லார்ட்ஹால்ஸ்பரி, லார்ட் ஸ்ட்ராத்கோனா, லார்ட் ராபர்ட்ஸ், டாக்டர் ஆல்ப்ரெட் ரஸ்ஸல் வாலேஸ் ஆகிய இவர்கள் 80-85-வயதுக்கு மேற்பட்டு 90-95-வயதுக்குட்பட்டிருந்தும் சிரஞ்சீவியாக வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள். தேஹம் முதிர்ந்தாலும் மனம் எப்போதும் சிறஞ்சீவியாகவே தானிருக்கும். தேஹம் வேலைக்குதவாமல் துர்ப்பலப்பட்டால்தான் அதைவிட்டு நீங்குகிறது மனம். ஆகையால் மனதைப் பாதுகாத்துவந்தால் அது தானே தேஹத்தைப் பாதுகாக்கும் லார்ட் ஸ்ட்ராத்கோனா அவர்கள் "Who rests rusts', என்கிற உண்மையைக் கைக்கொண்டொழுகி வருகிறவர். அவருடைய புத்திமதி யென்னவென்றால்:—

"Be contented with your lot, but always be fitting yourself for something better and higher. Do the work yourself; don't wait for friends to use their influence on your behalf. Apart from what we call genius, believe that one man is able to do well as any other, provided the opportunity presents itself and he is blessed with good health."

"விதியை நொந்து பயனில்லை. போதுமென்னு மனதே பொன்செய்பு மருந்து உன் ஸ்தானத்திலிருந்து கைக்கு வந்தவேலையை நன்றாகச் செய்து வருகையில் அதைவிட மேலான வேலை பார்க்கத்தக்க யோக்கியதையும் உயரந்தஸ்துக்குரியவனாகும் பாத்திரமும் உன்னிடத்திலிருக்கப்பார். கைக்குவந்த வேலையை வஞ்சனையின்றி உன் சொந்த முயற்சியைக்கொண்டு நீயேசெய். உன் சிநேகிதர் சிபார்சுக்கும் சலுகைக்கும் எதிர்பார்த்து நிற்காதே. சூக்ஷ்ம புத்தி மிகுந்த அபூர்வமான சிலரைத் தவிர மற்றப்படி, ஒருவன் செய்யக்கூடிய வேலையை வேறு எவனாலும் சமய சந்தர்ப்பங்கள் சரியாய் நேர்ந்து சௌக்கியமும் இருந்தால் நன்றாகச் செய்யக்கூடும் என்று நம்பு. இது பயத்தையும் அவநம்பிக்கையையும் போக்கும்.

ஆகையால் சிரஞ்சீவியாயிருப்பதற்கு வழியென்னவென்றால், சிரஞ்சீவித் தன்மை மனதுக்கே பொருந்துமென்றுணர்ந்து அதை அழுக்காறு நீக்கி தேஹத்தாலும் மனத்தாலும் தன்னயம் பாராட்டாது உழைக்கப் பழகுவதே பிழைக்கும் வழியென்றுணர்ந்து ஆத்ம சிந்தையுள்ளவனாய் விடாமுயற்சியோ டுழைக்கப்பழகுவதாம். இந்தப்பழக்கம் பிறந்ததுமுதல் கடைசிவரையில் விடாது தொடர்ந்துவரத்தக்கதென்றுணர்ந்துழைக்கவும். இதுவே சஞ்சீவிமலை. ஏனென்றால் இந்த உழைக்கப்பழகுவது மலையாக வளர்வதோடு ஆயுராரோக்கியத்தையும் கொடுப்பதாயிருக்கிறது.

—:++:—

## Lalitambal—VIII. Marriage.

## லளிதாம்பாள் சரித்திரம்.

### VIII—விவாகம்.

——(:o:)——

பார்வதியம்மாளும் அம்மாமிப்பாட்டியும் சேர்ந்து போட்ட பிரம்மமுடிச்சு மிகவும் கெட்டியான முடிச்சு. யோகிகள் பிரம்மக்ரந்தி, விஷ்ணுக்ரந்தி, ருத்ரக்ரந்தி யென மூன்று முடிச்சுகள் இருக்கின்றன வென்று சொல்கிறார்கள். அந்த முடிச்சுகளையும் அவிழ்க்க வழியுண்டு; ஆனால் பார்வதியம்மாளும் அம்மாமிப்பாட்டி

யும் சேர்ந்து போட்டமுடிச்சை அவிழ்க்க வழியில்லாமற்போய்விட்டது. பெண் சிறுமியானதால் அவளைப்பற்றிய விசாரம் ஒன்றுமில்லை. பிள்ளையாண்டான் படித்துப் பட்டணத்தில் ஸ்வதந்திர ஜீவனம் அமர்ந்தவனு யிருந்ததால் அவனை அவர்கள்வழிக்குக் கொண்டு வருவது முதலில் கொஞ்சம் கஷ்டமாயிருந்தது. ஆனாலும் அம்மாமிப்பாட்டியின் ஆலோசனைபலம் நிறைந்தபார்வதியம்மாள் அதைரியப்படவில்லை. "துள்ளினமாடு பொதி சுமக்கும்" என்கிற பழமொழி யுண்டென்று அவளுக்குத் தெரியும். பிள்ளையாண்டான் இசைவதாயில்லை யென்று தெரிந்ததும் அந்த அம்மாளுக்கு உறுதிப்பாடு அதிகமாயிற்று. அவனுக்கே தான் அந்தக்குழந்தையைக் கொடுப்பேன் என்று பிரதிஜ்ஞை செய்துகொண்டு குலதெய்வங்களுக் கெல்லாம் பிரார்த்தனை செய்துகொண்டாள்.

"மீனாக்ஷியம்மா, என்ன இப்படி வெறுங்கையாகத் திரும்பி வந்தீர்களே!" யென்று பட்டணத்துக்குத் தூதுபோய்வந்த பிள்ளையின் தாயாரைக்கண்டு பார்வதியம்மாள் இரக்கக் குரலில் கேட்டாள். நான் என்ன செய்வேன், அம்மா! என்னாலான சமர்த்தெல்லாம் செய்து பார்த்தேன்! 22-ந்தேதி முகூர்த்தம் நடக்க வேண்டுமென்றால் அவனைச் சரிப்படுத்த என்னால் முடியாதம்மா!"

"நீங்களே இப்படிச் சொன்னால் அப்புறம்?"

"நான் என்னசெய்வேன்!"

"நீங்கள் தயவுசெய்து எனக்காக இன்னொரு தரம் பட்டணம்போய் வரவேண்டும். 22உ யில்லாவிட்டால் 26-ந்தேதியில் ஒரு முகூர்த்தம் இருக்கிறதாம். அந்த முகூர்த்தத்திலாவது விவாகத்தை நடத்திவிடவேண்டும். சமையல் தயாராய்விட்டது. நீங்கள் சாப்பிட்டுவிட்டு உடனே புறப்படுங்கள். எனக்காக நீங்கள் 'மாட்டேன்' என்று சொல்லாமல் போய்வரவேண்டும்."

"என்னடீ பார்வதி! அப்படி சொல்கிறையே! எனக்கென்ன வஞ்சனையா?"

"சிறு பிள்ளைகள் அப்படித்தான் முதலில் சொல்லும். முதலில் விட்டுக்கொடுத்துப் பிடியுங்கள். பிடிபட்டுப்போம்."

"அவன் அடுத்தவருஷம் ஆகட்டு மென்கிறான்."

"காலம் அநித்தியம்! சுபகாரியத்தை உடனே முடிக்கவேண்டும்."

"நீ சொல்வது சரிதான். அவன் பிடிகொடுத்துப் பேசமாட்டேன் என்கிறானே!"

"எல்லாம் உன்னிஷ்டம் என்று விட்டுக்கொடுத்துப் பிடியுங்கள்! வழிக்கு வருவான். அவன் நல்லபிள்ளை. இனமாகச் சொல்லவேண்டும்" என்றாள் பார்வதி.

"என்னமோ! பார்க்கிறேன் அம்மா! ஈசுவர சங்கல்பம் எப்படியிருக்கோ!" என்றாள் மீனாக்ஷியம்மாள். "அதெல்லாம் நம்ம பக்ஷம்தான். நீங்கள் சந்தேகப்படவேண்டாம். நீங்கள் தேகசிரமத்தைமட்டும் பார்க்கக்கூடாது!"

"நானா! ஒருதரத்துக்கு பத்துத்தரமாக வேண்டுமானாலும் போய்வருகிறேன். அதற்கென்ன இப்போ!" என்று சொல்லிவிட்டு மீனாக்ஷியம்மாள் மறுரயிலில்தானே பட்டணம்போகப் புறப்பட்டு விட்டாள்.

பார்வதியம்மாளும் மீனாக்ஷியம்மாளும் இப்படி பேசிக்கொண்டே எட்டாவதுநாள் அவர்கள் பிடித்த காரியத்தை நிறைவேற்றிக்கொண்டு விட்டார்கள். அவர்கள் நிச்சயித்த வதூவரர்க ளிருவருக்கும் விவாஹம் அன்றைக்கு நடந்துவிட்டது.

திருவசலூரில்தான் விவாகம் நடந்தது. வாமதேவ சாஸ்திரிகளுக்கு ஒரு பெரும்பாரம் தீர்ந்தது. அவருக்கு தமது பெண்ணுக்கு நல்ல வரன் கிடைத்ததைப்பற்றி சந்தோஷம்தான். ஆனால் மாப்பிள்ளை சர்க்கார் உத்யோகத்தில்

இல்லையேயென்கிற ஒரு குறைமட்டும் அவருக்குண்டு. 'ஸர்க்கார் சம்பளம்' என்றால் அத்குட்டிபோட்டுக்கொண்டு ஒன்றுபத்தாய் விருத்தியாகுமென்பது நாட்டுப்புறத்து ஜனங்களின் எண்ணம். சம்பளம் கொஞ்சமானாலும் 'மேல் வரும்படி'க் கிடமிருக்கு மென்பது அவர்கள் துணிபு. யோகக்ஷேமம் விசாரித்தால் "என்ன வேலை? அதற்கு சம்பளமென்ன? மேல்வருமானம் என்னவரும்?" என்று கேட்பார்கள். இந்த "மேல்வருமானம்" அக்கிரம சம்பாத்தியமாயிற்றேயென்று சிறிதும் கருதார்கள். "சர்க்கார் சேவகத்தின் மஹிமை அப்படிப்பட்டது!" என்பார்கள்.

சில தினங்களுக்குமுன் கும்பகோணத்திலிருந்து என் தாயாருக்குத் தமக்கை பெண்ணுடைய அத்தானுக்கு அம்மாஞ்சி பட்டணம் வந்திருந்தார். அவர் அங்கேயொரு தகுந்த உத்யோகத்தி லிருக்கிறாரென்று எனக்குத்தெரியும். அவர் என்னைப்பார்க்க வந்திருந்தார். நாங்கள் யோகக்ஷேமங்களை விசாரித்துப் பேசிக்கொண்டிருக்கையில் "பட்டணம் வந்த காரியமென்ன?" என்று கேட்டேன்.

"ஒரு சிபார்சு கடிதம் வேணும். அதற்காக வந்தேன்" என்றார்.

என்ன விசேஷம் என்று விசாரித்தபொழுது அவர் உத்தேசித்து வந்த காரியத்தைச் சொன்னார்.

"நீங்கள் இப்பொழுதிருக்கிற வேலை அதைவிட மெலானதாயிற்றே?" என்று கேட்டதற்கு அவர்,

"ஆம்! ஆனால் அதில் மேல் வருமானத்துக் கிடமில்லை!" யென்று நிஷிதமாகச் சொன்னார்.

"புதிதாய்த் தேடிக்கொண்டிருக்கும் வேலையிலோ?" என்று கேட்டேன்.

"அப்பா! நல்ல வருமானமாயிற்றே! அந்த வேலைமட்டும் கிடைத்துவிட்டால், அப்புறம் விசாரமே யில்லை?" யென்றார்.

"15 ரூபாய் வேலை—20 ரூபாய் வரையில் உயரலாம். இந்த இருப்து ரூபாயில் உமது தரித்திரம் ஹதமாய் விடுமா?" என்றேன்.

"அந்த இருபது ரூபாய் அச்சாரம் கொடுத்தாப்போல்தானே. அதற்குச் செலவேது? தினம் படிச் செலவு கிடைக்கும். அதோடு மேல் வரும்படி ஒரு நாளைக்கு குறைந்தது இரண்டு மூன்று கிடைத்துக்கொண்டே யிருக்கும். இது சராசரிக்கணக்கு" என்றார்.

நான் அதைக்கேட்டு மிகவும் அதிசயப்பட்டேன் "என்ன அம்மாஞ்சி! இப்படிச் சொல்கிறீரே! இந்த அநியாயம் மேலதிகாரிகளுக்குத் தெரியாதா?" என்றேன்.

"அவர்கள் செய்தி எங்களுக்குத் தெரியாதா என்ன! எல்லாம் சரியாகத்தானிருக்கும்" என்றார்.

இந்தமாதிரியான எண்ணம் புதிதல்ல. 'சர்க்கார் சம்பளம்' என்றால் விசேஷம்தான் என்பர் வாமதேவசாஸ்திரிகள். அவருடைய மாப்பிள்ளை சர்க்கார் உத்தியோகத்தைச் சிந்தாது ஸ்வதந்திர ஜீவனத்திலிருப்பதே மேலென்று நினைத்தது ஒன்றுமட்டும் அவருக்கு குறையாக விருந்தது. மற்றப்படி யெல்லாம் அவருக்குத் திருப்திதான். சிலகாலம் மாப்பிள்ளை புத்தியைத் திருப்பப் பார்த்தார். அவருடைய யத்தனம் பலிக்காதது கண்டு "உன்னிஷ்டம்" என்று விட்டுவிட்டார். விவாகமான பின் தலை தீபாவளிக்கு மாப்பிள்ளை வீட்டுக்கு வந்திருந்தபோது கடைசியாக ஒரு பிரயத்தனம் செய்து பார்த்தார். அதுவும் பலிக்காமற் போகவே "போகிறான்!" என்று விட்டுவிட்டார்.

பெண்ணுக்கு விவாகமானபின் அவள்புக்ககம் போய் வாழ்வதை யிருந்து பார்க்க அவர் கொடுத்துவைக்க வில்லை.

வாமதேவ சாஸ்திரிகள் பரமபதமடைந்த மூன்றாவது மாசம் அவர் பெண் புக்ககம் செ

ன்றாள். அவருடைய வருஷாப்திகம் முடிந்தவுடன் விவாகம் பூர்த்தி செய்யப்பட்டது. பார்வதியம்மாள் போட்ட பிரம்மமுடிச்சு பலித்துவிட்டது. தம்பதிகளிருவரும் மனதொத்து வாழ்ந்தார்கள். திருவல்லிக்கேணி பெரிய தெருவில் 320-வது நெம்பர் வீட்டில் நாம் கண்ட தம்பதிகள் இவர்கள்தான். இவர்கள் பட்டணத்தில் தானே வசித்துக்கொண்டிருந்தார்கள். பட்டணத்தில் நல்லவர்களும் கெட்டவர்களும் பாலும் நீரும்போல் கலந்து வசிப்பார்கள். உத்தம சித்தமுள்ளவர்கள் ஹம்ச பட்சியைப்போல் நீரைத் தள்ளி பாலைக்கொள்ளல் வேண்டும். இல்லாவிட்டால் சகவாச தோஷம் நேரிடும்.

"கெட்டவன் பட்டணம் சேர்" என்கிற பழமொழி கேட்டதுண்டே! ஆகையால் பட்ணத்தில் கெட்டவர்கள் கூட்டம் ஜாஸ்தி. ஆனால் யோக்கியர்களும் அவர்களிடையே வசித்துக்கொண்டிருக்கிறார்கள். கெட்டவன் பட்டணம் சேர்வதன்றி பட்டணம் சேர்ந்தவன் கெட்டுப்போவது முண்டு. அதற்குக் காரணம் சகவாஸ தோஷந்தான். "கூடா நட்பை"க் கண்டு விலக்குவது மிக கஷ்டம். நல்லவர் போல் நடிப்பவர்கள் உண்மையில் மிகவும் கெட்டவர்களா யிருப்பார்கள். போக்கிரிக்கு போக்கிரியாய் ஈடு கொடுத்துக்கொண்டிருப்பவர்கள் போக்கிரிகளே யானாலும் அவர்களில் யோக்கியர்களும் இருப்பார்கள். இவர்கள் புடமிட்ட தங்கம்போல் பழுதிலா நடத்தை யுடையவர்களா யிருப்பார்கள். ஆகையால் பட்டணத்தில் வஷித்து முன்னுக்கு வர விரும்புகிறவன் குணநாடிக் குற்றமுநாடி மிகைநாடி, மிக்கக் கொளல் வேண்டும்.

திருவள்ளுவரைப் போன்ற மஹான்களும் வாயிலா நாயனர் பட்டணத்துப் பிள்ளை போன்ற அடியார்களும், திருஞான சம்பந்தர் போன்ற திருநாவுக்கரசு சுவாமிகள் போன்ற சமய குரவர்களும் இப்பட்டணத்தருகேயுள்ள ஸ்தலங்களிலிருந்து ஸித்திமுத்திகளைப் பெற்றார்களென்றால் இந்த க்ஷேத்திரத்தின் மஹிமையைப் பற்றிக்கேட்பானேன்.

இவர்களைப் பார்த்த கண்ணால் தோர்ட்டில் நடக்கும் நடபடிக்கைகளைப் பார்த்தால் ஜகப்புரட்டர்களான முதல்தர ஆசாமிகளும் இங்கேயேதான் இருக்கிறார்களென்று தோன்றும். "பட்டணம் போக்கிரி". "கஜபோக்கிரி" யென்கிற வார்த்தைகளின் அர்த்தத்தை யுள்ளபடி யறியவேண்டு மென்றால் பட்டணத்தில் பலகாலம் வசித்து படாத பாடெல்லாம் பட்டனுபவித்த மஹானுபவிகளை யண்டிப் பாடங் கேட்க வேண்டும். அப்பொழுதும் ஆள் விழித்த பேர் வழியாக விருந்தால்தான் உண்மை தெரியும். சற்று அசதி மறதியாயிருந்தால் ஏமாந்துபோக வேண்டியதுதான். ஆணுக்கும் பெண்ணுக்கும் விவாஹம் நடப்பதுபோல் இந்தப் பட்டணவாழ்வு நல்லது பொல்லாது என்கிற இரண்டுக்கும் நடக்கும் ஒரு இரகசிய விவாஹத்தின் பலனுப் ஓர் அற்புத வாழ்வு என்று சொல்லலாம். பட்டணத்திலிருந்தும் தேறுதவனுக்கு வேறு எங்கு போனாலும் கதியில்லை.

---

## Educational Notes.

### வித்யா சம்பந்தமான குறிப்புகள்.

### The Montessory System.

### வித்யாபோதன முறை.

வித்தை பயில்வது இலகுவல்ல!—மிகவும் கஷ்டமான வேலை. விடாமுயற்சியோடுழைக்க வேண்டும். வித்யாப்பியாசத்தைவிட வித்யாபோதனை மிகவும் கஷ்டம். எட்டுப்படிப்பு என்னத்திற்கு உதவும்? ஒன்றுக்கும் உதவாது. ஆதலால் வித்யார்த்தியின் பக்குவமறிந்து விஷயங்கள் மனதிற் பதியும்படி போதிக்க வேண்டும். அந்த தத்துவஞானம்தான் உபாத்தியார்களிடம் குறைவு. ஏனெனில் அவர்களே

எட்டுப்படிப்புப் படித்துப் பரீக்ஷையில் தேறினவர்கள். பரீக்ஷை தேறிவிட்டதனுல்மட்டும் தத்துவஞானம் வந்துவிடாது. அதற்கு உலகானுபவமும் அவ்வனுபவங்களை யாய்ந்தறிந்து பிரித்துச் சேர்த்து பகுத்துத் தொகுத்து நித்யாநித்ய விவேகத்தால் அநித்யாம்சங்களை (Phenomenon) த் தள்ளி நித்யாம் சங்களை (Noumenon)த் தேர்ந்து தெரிந்து பற்றும் சாமர்த்தியம் வேண்டும். ஆதலால் வித்யாகுரு மனோதத்துவங்களை யறிந்தவர்களாக விருக்க வேண்டும். இந்த மனோதத்துவங்களைப் புஸ்தகத்தில் மட்டும் படித்தால் போதாது. குழந்தைகளுடைய ஸ்வபாவத்தை யறிந்து தேர்ந்து அந்தர்முக ஆராய்ச்சியினுல் மனதின் செயல்களையும் அச்செய்கைகளுக்கு ஆதாரமாயிருக்கும் தத்துவங்களையும் அறியவேண்டும்.

அப்படி யறிந்துகொண்டு போதிக்க ஒவ்வொரு பிள்ளைகளையும் தனித்தனிக் கவனித்து அவர்களுடைய மனோவிர்த்தியையும் பக்குவாபக்குவத்தையும் தெரிந்துகொள்ள வேண்டும். இது இந்தியாவில் ஆதிமுதல் குரு சிஷ்யனுக்குப் போதிக்கும் உண்மையான உத்தமமுறையாக விருந்து வருகிறது. இம்முறையை அனுசரித்து "Pestalozzi" பெஸ்டலோஸ்வி யென்பவர் ஒருவிதபாடபோதனுமுறை யேற்படுத்தினுர். அவர் முதல் உண்மையான போதனுமுறை யறிந்து போதிக்கவேண்டுமென்று பிரயத்தனப் படுகிறவர்களெல்லாரும் (Child Study) ஸ்ரீவித்தை (Nature Study) பிரகிருதி வித்தையாகிய இரண்டையும் கசடறக் கற்றுத் தேறினவரே போதகாசிரியர் தொழிலுக்கு அமைந்தவராவர் என்று உணர்ந்து வருகிறுர்கள். இப்படி உணர்ந்துதேறி உத்தமபோதனுமுறையை நிலைநிறுத்த உழைப்பவர்களில் மாடம் மன்டிஸ்ஸரி" (Madam Montessary) என்னும் இத்தலி தேசத்து டாக்டர் தற்காலம் பேர்போனவரென்று தெரியவருகிறது. இவருடைய அப்பியாஸ முறையைப்பற்றிய விஷயங்கள் லண்டன் எடியுகேஷனல் டைம்ஸ் (Educational Times) பத்திரிகையின் மே மாசத்துச் சஞ்சிகையில் விவரமாய் அச்சிடப்பட்டிருக்கிறது. இவர் விசாரணையின் முடிவு என்னவெனில் குரு சிஷ்யனையாய்ந்தறிந்து தேறினுலன்றி அவனை யுள்ளபடி முன்னுக்குக் கொண்டுவர அவரால் முடியாது என்பதாம். ஒவ்வொரு உபாத்தியாயரும் ஒவ்வொரு குழந்தையின் மனோபாவத்தை நன்றுய்க் கவனித்தறியவேண்டும்.

**The Correlation of History and Geography.**

**தேசசரித்திரமும் பூகோளசாஸ்திரமும்.**

இம்பொழுது தேச சரித்திரத்தையும் பூலோகசாஸ்திரத்தையும் வெவ்வேறு பாடமாக போதித்து வருவது உண்மையான போதனுமுறைக் கிசைத்தாயில்லை யென்று "ஜியாக்ராபிகல் அஸ்ஸோஸியேஷன்" சங்கத் தலைவரான மிஸ்டர் எச். ஜெ. மக்கிண்டர் (Mr. H. J. Mackinder) என்பவர் ஒருவியாசம் எழுதி வாசித்தார். "கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்றபடி கல்விகற்பது மனம் பழகுவதற்கே. மனப்பழக்கம் விஷய ஞானத்துக்கும் தத்துவ ஞானத்துக்கும் ஆகிய இரண்டுக்கும்அவசியம். ஸ்தலபுராணங்களில் க்ஷேத்திரம், தீர்த்தம், மூர்த்தி யென மூன்று உறுப்புகள் சொல்லப்பட்டிருக்கின்றன. க்ஷேத்திரம் என்பதுதான் பூமிசாஸ்திரம்; தீர்த்தம் என்பது பூமிசாரம்; மூர்த்தியென்பது க்ஷேத்ரஜ்ஞஸ்தானத்திலிருக்கும் ஆத்மஸ்வரூபம். பூமிசாஸ்திரம், பூமிசாரம், சரித்திரம் என மூன்றும் இணைபிரியாத் தன்மையன. மிஸ்டர் மாக்கிண்டர் இதை ஒருவாறு வற்புறுத்திக் கூறினுர். பூமி சாஸ்திரத்தையும் பூமி சரித்திரத்தையும் வேறுபடப் பிரிக்காமல் இரண்டையும் இணைபிரியா வித்யாசக்திகளாக உடனுெற்றவையாகப் போதித்து வரவேண்டும் என்றுர். சரித்திரம் க்ஷேத்ரஜ்ஞ சம்பந்தமானது. க்ஷேத்

திரம் தீர்த்தம் ஆகிய இரண்டும் க்ஷேத்ர சம்பந்தமானவை. இந்த மைலாப்பூர் சிவ க்ஷேத்திரம்; அதாவது சிவனுக்குரிய க்ஷேத்திரம். ஏனென்றால் அது வாயில்லாநாயனுருடைய தபோபலத்தால் அரசனும் அவர் திருவுள்ளத்துக்கு இசைந்தொழுகும்படி மஹிமை பெற்றது. இதன் பூசாரம் தீர்த்த விசேஷத்தால் விளங்கும். மூர்த்தி காபலீசுவரர் - கற்பகாம்பாள். அதாவது ஆத்ம ஸம்யம சங்கல்பசாதன க்ஷேத்திரம். இதில் அரசன் பிரஜைகளுடைய சரித்திரமும் ஸ்தல புராணத்தைப் பார்த்தால் அடங்கியிருக்கிறதாகப் புலப்படும். இப்படியே இக்காலத்துக்குத் தக்கபடி இதைப் போதிக்கலாம்

**The Battle of the Vernacular.**

**சுதேச பாஷாபி விர்த்தியைப்பற்றிய தர்க்கம்.**

திருச்சினப்பள்ளியில் கூடிய தென்னிந்தியா டீச்சர்ஸ் யூனியன் கான்பரென்ஸில் அக்கிராசனத்தை வகித்திருந்த ரெவரெண்ட் ஏ. எப். கார்டினர் அவர்கள் சுதேச பாஷாபிவிர்த்தியைப்பற்றி யூனிவர்ஸிடியில் நடந்துவரும் தர்க்கத்தைப்பற்றி விஸ்தாரமாகப் பேசினர். ஹைஸ்கூலிலிருந்து கலாசாலைக்குச் சென்ற மாணாக்கர்கள் சுதேச பாஷைகளில் ஒன்றை பாஷை சம்பந்தமாக அவசியம் படித்துவர வேண்டுமென்கிற நிர்ப்பந்தமின்றி, அவர்கள் சுதேசபாஷையில் வியாசமெழுதச் சாமர்த்தியமுள்ளவர்களாக விருக்கவேண்டியது மட்டும் அவசியமென்பது. யூனிவர்ஸிடி சங்கத்தார் ஏற்படுத்தியிருக்கிற விதி சுதேச பாஷாபிவிர்த்திக்கு அனுகூலமா என்பதைப்பற்றி விஸ்தாரமாய் விவரித்துப் பேசினர். சுதேசபாஷையில் கவலையுள்ளவர்கள் அந்த பாஷையை அலக்ஷியம் செய்துவிடாமல் படித்துவர இதுவே போதுமானதென்பது ஒரு சாரார் அபிப்பிராயம். முன்போல் சுதேசபாஷையை நிர்ப்பந்தமாகப் படித்து வரவேண்டுமென்பது மறுசாரார் அபிப்ராயம். ரெவரெண்ட் மிஸ்டர் கார்டினர் சுதேச பாஷாபி விர்த்தியைக் கோறினவரானாலும் சுதேசபாஷையில் வியாசமெழுதச் சக்தியிருக்கவேண்டுமென்றிருப்பதே போதுமென்று நினைக்கிறார். சுருங்கச்சொல்லில் தாய்பாஷா ஞானமில்லாதவித்தை அவித்தையேயென்பது நமது அபிப்பிராயம்.

——:(*)——

## Leela Sundari—Her Fortune.

### Chapter I.

### லீலாசுந்தரி—அவள் பாக்கியம்.

——:(++):——

#### I–ம் அத்தியாயம்.

பட்டணத்தில் எங்கும் நிறைந்திருக்கும் சாப்பாடு விடுதிகளில் ஒன்றில் ஒரு மேலறையில் ஒரு இளமங்கை உட்கார்ந்திருந்தனள். அந்த அறையில் ஒரு மேஜை, நாற்காலி, வீணைகளும், மேஜையின்மேல் சில புஸ்தகங்களும் இருந்தன. அந்த அறையைப் பெருக்கி நிரம்ப நாளானதால் புழுதி படிந்திருந்தது. அந்த அறை ஒரு பரம ஏழையின் அறைபோல் தோன்றிற்று. இந்த அறையிலிருந்த இள மங்கையின் முகத்தில் லக்ஷ்மிகளை தோன்றிற்று. அம்மங்கையை வர்ணித்து முடியாது. அம்மங்கையை லக்ஷ்மி என்றே சொல்லத்தகும். அம்மங்கை நாற்காலியில் உட்கார்ந்துக்கொண்டு தலையில் கையை வைத்துக்கொண்டு ஏதோ சிந்தித்துக்கொண்டிருந்தாள், பிறகு இடுப்பிலிருந்து ஒரு அணு நிக்கல் நாணயத்தை எடுத்து வைத்துக்கொண்டு கண்ணீர் விட்டுக்கொண்டிருந்தனள். அவள் ஆஸ்தி எல்லாம் அந்த ஒரு அணு நாணயம்தான். வயிறு பசியால் வாடிற்று. விடுதிகாரி நாகம்மாள் மிகவும் நல்லவள். அவளுக்கு 5, 6, குழந்தைகள் உண்டு. கணவன் இல்லை. ஒரு விதவை. அம்மாது இம்மங்கையினறைக்குள் பிரவேசித்தனள். வந்ததும் லீலா? சௌக்கியம்தானு என்று யோகக்ஷேமம் விசாரித்தாள். இம்மங்

(இம்மங்கையின் பெயர்தான் லீலாசுந்தரி.) லீலா சுந்தரி தலையை ஆட்டினாள். வாயைத் திறக்க முடியவில்லை. நாகம்மாள் "லீலா வாடகைப்பணம் தரவேண்டாமா? இன்றைய தினம் தருகிறதாகச் சொன்னாயே!" என்றாள்.

"ஆம் சொன்னதுண்டு அம்மா. என்கிட்ட இப்பொழுது இல்லையே என்னசெய்வேன்."

"ஆ லீலா, இப்படியும் சொல்லலாமா? அந்தப் படுபாவி வீட்டுக்காரன் என்னையும் என் குழந்தைகளையும் வீட்டைவிட்டுத் துரத்தி விடுவானே. சிறு குழந்தைகள் என்செய்யும், பாவம்!" என்று பிரலாபித்தாள்.

"ஆம் அம்மா. என்ன செய்வேன். என்கிட்ட இருக்கிறதெல்லாம் இதுதான் என்று அந்த நாணயத்தை எறிந்தாள். நாகம்மாள் திடுக்கிட்டு "என்ன! ஒரணாதானா இருக்கிறது! 4, 5, பேருக்கு பாட்டுச்சொல்லிக்கொடுத்துக்கொண்டிருக்கிறாய் என்றல்லவோ நினைத்துக்கொண்டிருந்தேன்!" என்றாள்.

"இல்லை, நான் நல்ல சிபார்சுடன் போகவேணுமாம். இல்லாவிட்டால் என்னைத் திருடியென்று சந்தேகிப்பார்கள்போலிருந்தது! அதனால் வேண்டாம் என்று சொல்லிவிட்டார்கள்; நான் என்ன பண்ணுகிறது! அம்மா செத்துப்போன நாளிலிருந்து நான் சம்பாதிக்கப் பிரயத்தனப் படுகிறேன். சம்பாதித்தபொழுது எல்லாவற்றையும் உன்னிடந்தானே கொடுத்துவந்தேன். இப்பொழுது ஒன்றும் அகப்படவில்லை. பசி, பிராணன் போகிறது. உன் குழந்தைகளைப்பற்றி நீ பார்த்துக்கொள். வீட்டுக்காரன் என்னைத் துரத்தினால் என்ன வரப்போகிறது! நாளைக்கு பட்டினியால் சாகிறவள் இன்று ராத்திரி பனியில் நனைந்து குளிரால் செத்தால் சாகிறேன்; அவ்வளவுதானே! நாளைக்கு சாகிறதை இன்றுதான் செத்தாலென்ன!" என்றாள் லீலா.

லீலா சொன்னவற்றை யெல்லாம் நாகம்மாள் கண்ணீர் விட்டுக்கொண்டு கேட்டாள். ஒரு தாயில்லாக் குழந்தை இம்மாதிரியாகச் சொன்னபொழுது அவளுக்கு அழுகை வந்துவிட்டது.

"லீலா! லீலா! நான் என் வறுமையினால் கேட்டேன். ஆ! என் கண்மணி!" என்று சொல்லுகையில் மாடிப்படி ஏறும் காலடியரவம் காதில் கேட்டது. "அதோ வீட்டுக்காரன் வருகிறான், நம்மைத் துரத்த!" என்று அலறினாள். இவள் இப்படி அலறுகையில் அறையின் கதவு திறந்தது. வந்தவர் உயர்ந்த உடை தரித்து ஒரு கண்யஸ்தர்போல் தோன்றினார். அவர் இம்மாதிரியாக இருவரும் இருப்பதைப் பார்த்து முன்வைத்த காலைப் பின் வாங்கிக் கொண்டு "லீலாசுந்தரி இங்குதான் வசிக்கின்ளோ." என்றார்.

"ஆம், அதோ இருக்கிறாள் லீலா" என்று சொல்லி, நாகம்மாள் பக்கத்து அறையிலிருந்து ஒரு நாற்காலியைக் கொண்டுவந்து போட்டுவிட்டுக் கீழேபோனாள். வந்தவர் நாற்காலியில் உட்கார்ந்துக்கொண்டு பேச ஆரம்பித்தார்:—

"அம்மா! நான் உன்னோடு சில விஷயங்கள் பேசவேண்டும். இப்பொழுது பேசலாமோ!" வென்று விநயமாய்க் கேட்டார்.

"பேசலாம்."

"உன்பேர் லீலாசுந்தரிதானே?"

"ஆம்! அதுதான் என்பேர்."

"சம்பகவல்லியின் குமாரியல்லவா?"

"ஆம் அவள் குமாரிதான்."

"நீ பாட்டுச் சொல்லிக் கொடுக்கிறாய்போலிருக்கிறது!"

"ஆமாம், வீணையும் பாட்டும் சொல்லித் தருகிறேன்."

"இப்பொழுது எத்தனை பேருக்கு?"

"ஒருவருக்குமில்லை."

"அடபாவமே!" என்று பெருமூச்சு விட்டார் வந்தவர்.

"இங்கு இருந்ததுதான் விடுதிக்காரியோ?"

"ஆம்."

"நிரம்ப துக்கத்திலிருந்தாரே?"

"ஆம். நாங்கள் இரண்டுபேரும் காசில்லாமல் கஷ்டப்படுகிறோம். நானும் அவளும் இந்த வீட்டுக்காரருக்கு வாடகை தரவேண்டும். தரா விட்டால் எங்களை இன்று ராத்திரி வீட்டை விட்டுத் துரத்தி விடுவதாகச் சொல்லி யிருக்கிறார்" என்றாள் லீலா.

"உன்னிடம் ஒன்று மில்லையோ" என்றார் வந்தவர்.

"இல்லை! இதுதான் இருக்கிறது." என்று ஒரு அணு நிக்கல் நாணயத்தை நீட்டினாள்.

முதலில் வந்தவர் பிரமித்துப் போய்விட்டார். பிறகு "அதை எனக்கு கொடுக்கிறீரா!" என்று கையை நீட்டினார்.

லீலா ஆச்சரியப்பட்டு "இந்தாரும்!" என்று கொடுத்துவிட்டாள்.

"சரி! உம் தாயாரின் ஊர் எது தெரியுமா? அம்மாதைப் பற்றி எனக்கு கொஞ்சம் தெரியும். அம்மாதின் ஊர் காலாபட்டி ஜமீன்." என்றார் வந்தவர்.

லீலா ஆச்சரியப்பட்டுக் கேட்டுக்கொண்டிருந்தாள்.

——:(*):——

# Easy Readings from Early English History.

## King Arthur and his Knights.

## ஆங்கிலேயர் பூர்வ சரித்திரக்கதைகள்.

### 2. ஆர்தர் அரசனும் இராஜவீரர்களும்.

——:(*):——

மஹா பிரிட்டனில் ரோமர்கள் நானூறு வருஷம் தங்கியிருந்தார்கள். பிறகு அவர்கள் சொந்தநகரமாகிய ரோம் அபாயத்திலிருந்தபடியால் அதைக்காப்பாற்றவேண்டி ரோமர்கள் மஹாபிரிட்டனை விட்டு விட்டுப் போய்விட்டார்கள்.

ரோமர்கள் மஹாபிரிட்டனைவிட்டுப் போனதும் "இங்கிலீஷ்" எனப்படும் முரட்டுக்கூட்டத்தார் வட கடலைத் தாண்டிவந்து பிரிட்டனைப் பிடிப்பதற்கு யத்தனித்தார்கள். இந்த முரட்டு இங்கிலீஷ் கூட்டத்தாரை பிரிடனுக்கு அரசனான ஆர்தர் மவுண்டு பேடன் என்னும் இடத்தில் தோற்கடித்தான். இந்த ஆர்தர் எனும் அரசனைப்பற்றி கதை கதையாய் எத்தனையோ சொல்லுகிறார்கள். அதைக் கேட்க விக்கிரமாதித்யன் கதைபோல் அவ்வளவு இனிப்பாயிருக்கிறது!

ஆர்தரின் பிறப்பு வளர்ப்பு 'மெர்லின்' எனும் மந்திரவாதி ஒருவனுக்குத்தான் தெரியும். அந்த மந்திரவாதி ஹேக்டர் எனும் ஒரு யுத்தவீரனிடத்தில் ஆர்தரை வளர்க்கும்படி கொடுத்தான். ஆர்தர் பையனாயிருக்கும் பொழுதே அவன் தகப்பனார் இறந்துவிட்டார்.

ஆர்தரைப்பற்றி யாருக்கும் ஒன்றும் தெரியாதாகையால் பிரபுக்கள் ஒருவருக்கொருவர் சிம்மாசனத்துக்காக சண்டை போட்டனர். மெர்லின் எனும் மந்திரவாதி இவர்கள் சண்டையால் தேசமானது கெட்டுப்போவதைப் பார்த்து வருத்தப்பட்டு அவர்களைப் பார்த்து ஓரிடத்தில் வந்திருக்கும்படிக்கும் அங்கு அரசன் இன்னாரென்று தான் சொல்லுவதாகவும் சொன்னான்.

பிரபுக்கள் எல்லாரும் ஆவலுடன் குறிப்பிட்ட இடம்போய்ச்சேர்ந்தார்கள். அங்கு யாராலும் அசைக்க முடியாத ஒருபெரிய மரக்கட்டையும் அந்தக்கட்டையில் ஒரு தங்க கைப்பிடியுள்ள பட்டாக்கத்தியும் புதைக்கப்பட்டிருந்தது. அந்தக் கத்தியின் பிடியில் "இதை எடுப்போன் அரசன்" என்று எழுதியிருந்தது.

அதைப்பார்த்து, அந்தப் பிரபுக்கள் ஒவ்வொருவராய் அந்தக்கத்தியை எடுக்கப் பார்த்தார்கள். யாராலும் அதை அசைக்க முடியவில்லை. இந்தச் சமயத்தில் ஹேக்டர், அவர் குமாரன் கேயி, ஆர்தர் ஆகியமூவரும் அவ்வழியாகப் போய்க் கொண்டிருந்தார்கள். அப்பொழுது கேயி தனது உடைவாளைக்காணுமல் ஆர்தரை அதை ப்பார்த்துக்கொண்டு வரச்சொன்னுன்.

அப்படியே ஆர்தர் போய்ப்பார்த்துக் காணுமல் திரும்பி வருகையில் கூட்டத்தைப்பார்த்து அங்கு வேடிக்கை பார்க்கப்போனுன். போனவன் நடுவில் ஒரு பட்டாக்கத்தி இருப்பதைக் கண்டு அதைப்போய் எடுத்தான். மற்ற வீரர்களுக்கு வராதது இவனுக்கு லேசாய் வந்துவிட்டது. அதை ஆர்தர் எடுத்துக்கொண்டு கேயியினிடம் ஓட்டமாய் ஓடி அதைக்கொடுத்தான். ஹேக்டரும் கேயியும் அதில் "இதை எடுப்போன் அரசன்" என்று எழுதி யிருக்கக்கண்டு ஆர்தரை முழந்தாளிட்டு வணங்கினுர்கள். இதற்குள் மற்ற பிரபுக்களும் இதைப்பார்த்து ஆர்தரை இன்னெருதரம் அந்தப் பட்டாக்கத்தியை அந்த மரக்கட்டையில் வைத்து எடுக்கும்படி சொன்னுர்கள். ஆர்தர் அப்படியே செய்யக்கண்டு அவர்கள் ஆர்தரை அரசனுக முடிசூட்டினுர்கள்.

ஆர்தர் அரசனுனபிறகு தேசத்திற்குப் பல நன்மைகளைச் செய்தான். ஆர்தர் தன்னைச் சுற்றி வளையவரப் பொறுக்கியெடுத்த விக்கிரம வீரர்கள் சிலரை † ஏற்படுத்திக்கொண்டான். இவர்கள் ஆர்தரோடு கூட சாப்பிடுவார்கள். இவர்கள் தேசத்தைச் சுற்றிவந்து அரசனுக்குப் பதிலாக துஷ்டநிக்கிரகமும் சிஷ்டபரிபாலனமும் செய்யவேண்டும். பராக்கிரமசாலிகளாயும், உத்தமர்களாயும் இருப்பவர்கள் மட்டுமே இந்த வீரர்குழாமில் சேர்த்துக்கொள்ளப் பட்டார்கள்.

† nig hts of the Round Table.

கவி சிரேஷ்டரான டென்னிசன் அவருடைய கவிகளில் ஒன்றில் ஆர்தரும் அவர் இராஜவீரர்களும்செய்த அற்புதச்செய்கைகளைப்பற்றி சொல்லி யிருக்கிறுர். அதில் ஆர்தர் இறந்த விதத்தையும், அவர்மந்திரவாள்*'எக்ஸ்காலிபரையும்' பற்றி விஸ்தாரமாகச் சொல்லியிருக்கிறுர்.

ஆர்தர் இறந்தபிறகுகூட பிரிட்டன் தேசத்தார் அவர் திரும்பிவந்து அவர்களைக் காப்பாற்றுவாரென்று நம்பினுர்கள்.

---

Short Story.

## Slaves of Passion.

## ஜக–மோஹன தாஸர்கள்.

(ஒரு சிறுகதை,)

"காணியாசை கோடிகேடு."

——(:*:)——

சென்னையில் நாகரிகம் மலிந்துவிட்டது. வியாபாரம் விர்த்தியாய்க் கொண்டு வந்தது. நேற்று பணமில்லாமலிருந்தவர்கள் இன்று லக்ஷாதிபதிகளானுர்கள். நேற்று லக்ஷாதிபதிகளா யிருந்தவர்கள் இன்று பிக்ஷாதிபதிகளாய்த் திரிந்தார்கள். ஒரேநாளில் பிக்ஷாதிபதி லக்ஷாதிபதி யாவதும், லக்ஷாதிபதி பிக்ஷாதிபதியாவதும் எப்படி? யென்று இதை வாசிப்போர் ஆச்சரியப்பட்டுக்கேட்கலாம். அந்த இரகஸியத்தைத் தான் வெளியிடக்கூடாது. வெளியிட்டால் தலைபோய்விடும். ஆனுலும் அந்த இரகஸியம் அடங்கிய ஒரு கதை சொல்வோம். கதைக்குக் காலில்லையென்பார்கள். அது மெய்யோ பொய்யோ நாம் அறியேம். கதைக்குக் காலில்லாவிட்டால் அது வெகுதூரம் வாய்க்குவாய் தாண்டியோடிப்பரவுகிறதே அது எப்படி? அதைத்தான் இதை வாசிப்போர் கண்டுபிடித்துக்கொள்ள வேண்டும். கண்ணுள்ளவர்கள் காணட்டும். இல்லாதவர்கள் போகட்டும்.

சென்னையில் நாகரிகம் மலிந்து விட்டதுஎன்று சொன்னேம். அப்படியென்றுல் என்ன?

* Excalibar.

மோடார்வண்டிகளின் கணக்கு அதிகரித்து விட்டது. பெங்களாவில் வசிப்பவர்கள்தொகை மட்டுமல்ல, பெங்களாக்களும் அதிகமாய்ப் பெருகி வந்தன.

நேற்று வயல்வெளியாக விருந்தவிடம் இன்றைக்கு அழகிய பெங்களாவும் அதைச் சுற்றிப் பூந்தோட்டமுமாக விளங்குகிறது. மின்சார விளக்குகள் எங்கும் அதிகரித்துவிட்டன. 'பெரிய மனுஷர்கள்' மலிந்துவிட்டார்கள். முன்காலத்தில் திருவாரூர் முத்துஸாமி ஐயர் ஒருவர் ஏழையாயிருந்து முன்னுக்கு வந்தார். அவர் தலையெடுக்க எத்தனையோ வருஷங்கள் சென்றன. மிகவும் உயர்ந்த உத்யோகத்தில் பல வருஷங்களிருந்து என்றுமழியாத புகழுடம் பெடுத்தாரேனும், அவர் காலஞ்சென்றபொழுது மூன்றுலக்ஷ ரூபாய்தான் ஆஸ்தி வைத்துப்போனுரென்று வதந்தி. இப்பொழுது லக்ஷாதிபதிகளா யிருக்கப்பட்டவர்களுக்கு மூன்றுலக்ஷரூபாய் மூக்குப்பொடிக்குக் காணுது. "பத்து லக்ஷத்துக்குக் குறைந்தால் அது ஒரு ஆஸ்தியா?" என்கிருர் நமது ஜகதாஸ்.

இந்த "ஜகதாஸ்" என்பவர் யார்? அவர் நயதாஸ் புத்திரர். பயதாஸ் பேரன். அவருடைய பாட்டனுர் பயதாஸ் பணத்தைச் செலவிட பயந்து பயந்து அரும்பாடு பெரும்பாடு பட்டுப் பணத்தைச் சேர்த்தார். அவருக்குப்பின் நயதாஸ் தன் தகப்பனுர் வைத்த பொருளை யழிக்காமல் எல்லாரையும் நயமாய் சிநேகம் செய்துகொண்டு 35-வருஷம் முனைந்துழைத்து அரைலக்ஷத்தை ஒருலக்ஷ மாக்கினுர். இவர்கள்தான் முன்காலத்து லக்ஷாதிபதிகள்.

இப்பொழுது நமது ஜகதாஸ் மதிப்பில் இவர்களெல்லாரும் "பிச்சைக்காரர்கள்" ஜகதாஸுக்கு வயது வந்த பொழுது அவருடைய தகப்பனுர் அவருக்கு 25-ஆயிரம் ரூபாய் முதல் கொடுத்து கம்ஸன் கம்பெனியில் துவிபாஷியாக விருக்கச் சிபார்சுசெய்து வைத்தார். நயதாஸுக்குத் தம்பி யொருவரிருந்தார். அவர் குடும்ப பூர்வமான நகைவியாபாரத்தைப் பார்த்து வந்தார். அவர்பேர் தயதாஸ். தயதாஸுக்குப் பிள்ளையில்லாமற்போக நயதாஸ் இளைய குமாரனுன மோஹனதாஸை ஸ்வீகாரம் செய்து கொண்டார். ஜகதாஸ் ஆறுவருஷம் கம்ஸன் கம்பெனியில் வேலைபார்த்து வந்தார். அதற்குள் அவர் குவியல்குவியலாகப் பணம் சேர்க்கும் ரகஸியத்தைக் கற்றுக்கொண்டு விட்டார்.

கம்ஸன் கம்பெனித்தலைவர் ஒரு பழம் பெருச்சாளி. அவர் சீமையில் பெருத்த பணவியாபாரத்திலிருந்து கைசளைத்துப்போய் இந்தியாவுக்கு வந்தவர். இங்கே வந்ததும் அவர் ஒரு புதிய ஏற்பாடு செய்தார். அது நன்குகப் பலித்தது. பெரிய வியாபாரங்களில் பங்கு வைத்து முதல் சேர்க்கிற வழக்கம் சென்னையில் அவ்வளவாகப் பிடிபடவில்லை. ஏற்கனவே யுள்ள வியாபாரிகள் சொந்தத்தில் கைம்முதல் போட்டு வியாபாரம் செய்து வந்தார்கள். வியாபாரத்தில் துணைக்கு நல்லயோக்கியர்களான வர்களைச் சேர்த்துக்கொண்டு நாளடைவில் அவர்களைப் பங்காளிகளாகச் செய்து கொண்டார்கள்.

கம்ஸன் துரைக்கு அதில் அவ்வளவு நாட்டமில்லை. அவர் சொந்தத்தில் கைம்முதல்போட அவ்வளவாக அவரிடத்தில் பணமுமில்லை. ஆனுல் பெருமுதல் சேர்க்கும்விதம் அவருக்குத் தெரியும். கூட்டுவியாபாரக்கம்பெனிகள் சேர்ப்பதில் அவர் மகாசமர்த்தர்.

ஒரு பொட்டைவெளிநிலத்தை சர்க்காரிடம் குத்தகைக்கு வாங்கிக்கொண்டு, பிரமசாரி தலையில் எள்ளைப்போட்டுக் கொண்டு மனோராச்சியம் செய்ததுபோல, அதில் ரப்பர் சாகுபடி செய்தால் ஒன்றுக்கு மூன்று லாபம்வரும். அந்த ரப்பரை சுத்திபண்ண யந்திரங்கள் வைத்து வேலை செய்தால் ஒன்றுபோட்டு ஐந்து லாபம் எடுக்கலாம். அந்த ரப்பரைக் கப்பலேற்

றிக்கொண்டுபோய் ஐரோப்பா அமெரிக்கா தேசங்களில் விற்றால் ரப்பர் கிராக்கியாயுள்ள இடங்களில் ஒன்று பத்தாக விலேயேற விற்கலாம். இப்படியாக அவர் பணம் விருத்தி செய்யும் வழிகளைக்காட்டி ஏழைகள் மனதை மயக்கி அவர்கள் காசைப்பறிப்பதில் கெட்டிக்காரர். ஒருபங்கு ஒன்றுக்கு 1000 ரூபாய் விகிதம் 100 பேர் சேர்ந்தால் லக்ஷரூபாய் முதலாய்விட்டது. லக்ஷரூபாய் முதலிட்டு ரப்பர் பயிர் செய்தால் 20 வருஷத்தில் அது 30 லக்ஷரூபாய் பெறுமான ஆஸ்தியாக மாறுவதோடு 100 க்கு பத்து அல்லது பன்னிரண்டு விகிதம் வட்டியும் கிடைக்குமென்று கணக்குப்போட்டுக் காட்டுவார். இப்படி முதலில் நாணயமான இரண்டொரு வியாபாரங்களிலிறங்கி ஆசைகாட்டி நன்றாகக் காசுபறிக்கக் கற்றுக்கொண்டபின், காபித்தோட்டமென்ன! பொன் வெள்ளி சுரங்கங்களென்ன! இன்னம் எத்தனையோ தொழில்களிலிறங்கி வேலைசெய்யத் துணிந்து விட்டார். அவர் ரப்பர் தோட்டம் போட 1000 ரூபா பங்கு சேர்த்தது இப்பொழுது பங்கு ஒன்றுக்கு 5000 ரூபாயாக விற்கிறது. இதையெல்லாம் கமுக்கமாக ஏற்பாடு செய்து காசு தட்டுகிற இரகசியம் அவருக்குத்தான் தெரியும்.

இன்றைக்கு லக்ஷரூபாய்க்குப்பங்குகள்வாங்கி நாளைக்கு இரண்டாம் பேருக்குத் தெரியாமல் அவைகளை 5 லக்ஷ ரூபாய்க்கு விற்று விடுவார்.

இந்த இரகசியத்தை ஜகதாஸ் அவரிடமிருந்து கற்றுக்கொண்டார். கம்ஸன் துரை தனக்கு தேஹ பலமுள்ள மட்டும் இந்த இரகசியத்தை யாருக்கும் தெரியவிடாமல் கமுக்கமாய் மூடி வைத்துவந்தார். அவருக்கு வயோதிக காலம் வரவே அந்தரங்கமாய் ஒரு குமஸ்தா வைத்துக்கொள்ள வேண்டியிருந்தது. அந்த ஸ்தானத்துக்கு துவிபாஷி ஜகதாஸ் அவர்களைத் தெரிந்தெடுத்துக் கொண்டார். அதுமுதல் அவருக்குச் சுக்கிரதசைதான்.

மூன்று வருஷங்களின்தும் ஜகதாஸ் அவருடைய இரகஸியங்களை யெல்லாம் கற்றுக்கொண்டுவிட்டார். கற்றுக்கொண்டதுமன்றி அவர் சீமைக்குப் போகும்பொழுது அவருக்கு 10 லக்ஷ ரூபாய் கொடுப்பதாகச் சொல்லி அவர் கம்பெனிபேரையும் பிரக்கியாதியையும் வாங்கிக்கொண்டார்.

இப்படி பங்குகள் வாங்குவதும் வாங்கின பங்குகளை சமயமறிந்து விற்பதும் வழக்கமாயிருக்கிற இடத்துக்கு இங்கிலீஷில் "எக்ஸ்சேஞ்" என்று சொல்லுகிறது. அதாவது "கைமாற்றுஸ்தலம்"—பங்குகள், பணம் கைமாறுகிற இடம்என்றுபேர். இங்கே தினம் லக்ஷம் கோடிக் கணக்கான தொகைகள் கைமாறிக்கொண்டேயிருக்கும்.

உண்மையாய்ப் பார்க்கப்போனால் இது சூதாடுவது போலாம். ஏனெனில் நாளைக்கு விலையேறுமென்று தெரிந்துகொண்டு இன்றைக்கு லக்ஷம் கோடிக் கணக்காக பங்குகளை விலைக்கு வாங்கி விலையேறின சமயம்பார்த்து அவைகளை லாபத்துக்கு விற்பது சகஜமான வியாபாரமாகத் தோன்றினும் அதில்வரும் லாபமும் நஷ்டமும் ரகஸியமான சில சமத்கார விஷயங்களைப் பொருத்ததாயிருப்பதால் அந்த இரகஸியத்தை விற்பதுபோல்தான் ஆகிறது. அதிலும் எத்தனையோ சூது இருக்கிறது. அதையெல்லாம் வெளியிடக்கூடாது. வெளியிட்டால் தலை போய்விடும்.

II.

ஜகதாஸ் கம்ஸன் கம்பெனியில் முதலாளியாகி "எக்ஸ்செஞ்" வியாபாரத்தில் தேர்ந்தவராகி வெகு சீக்கிரத்தில் கோடீஸ்வரனாய் விட்டார். அவருக்கு லக்ஷம், பத்துலக்ஷம் வருவதும் போவதும் பிரமாதமல்ல. இன்றைக்கு 10-லக்ஷம் ரூபாய் லாபம் சம்பாதிப்பார்—நாளைக்கு 5-லக்ஷம் தோற்றுவிடுவார். இப்படியாக அவர் கோடீசுவரனாய்விட்டார்.

அவர் பெரிய 'மோட்டார்கார்' வைத்துக்கொண்டு விசாலமானதோட்டமுள்ள பெங்களாவில் வாசம் செய்துகொண்டிருந்தார். அங்கிருந்து பட்டணத்துக்கு வருவார். பிறகு சாயங்காலம் பெங்களாவுக்குப் போவார்.

ஜகதாஸுக்குப் பணம் பெருகப் பெருக அந்தஸ்தும் பெருத்தது. தனக்கு அந்தாங்க காரியதரிசியா யிருக்க ஆண்பிள்ளை யுதவாது, ஒரு வெள்ளைக்காரப் பெண் வேண்டுமென்று விரும்பினர். உடனே பட்டணத்திலுள்ள டைபிஸ்ட் வேலையில்தேர்ந்த மிஸ். மேரி மார்ஸ்டன் என்னும் ரூபவதியான பெண்ணை மாசம் 250-ரூபாய் சம்பளம் கொடுப்பதாகச் சொல்லி தனக்குள் காரியதரிசியாக அமர்த்திக் கொண்டார்.

ஜகதாஸ் வியாபார விஷயங்களில் கைதேர்ந்த ஆள்தான்;—ஆனல் அவருக்கு எண்ணம் வேறு. ஒரு வெள்ளைக்காரப் பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ளவேண்டுமென்கிற கருத்துண்டு. ஏனென்றுல், தான் மோட்டாரில் போகும் பொழுது தனக்கு சொந்த பெண்சாதியான ஒரு துரைசானி பக்கத்திலுட்கார்ந்து கொண்டிருந்தால் அவருடைய அந்தஸ்து இன்னும் பெருக்குமென்பது அவருடைய எண்ணம்.

ஆகவே ஒருநாள் சாயங்காலம் மிஸ் மேரி மார்ஸடன் வீடு தேடிக்கொண்டுபோய் அவளைத் தனக்கு மனைவியாகவிருக்கக் கேட்கவேண்டுமென்று சென்றுர். ஆனல் திடீரென்று எப்படிக் கேட்கிறது? என்று தெரியவில்லை.

ஆனலும் தன்னிடத்தில் பணம் மிகுதியாயிருப்பதால் அந்தப் பெண் சம்மதிப்பாளென்றே நம்பியிருந்தார். வெள்ளைக்காரப் பெண்களுக்கு ஐசுவரியமும் அந்தஸ்துமிருந்தால் இந்தியர்களைக் கலியாணம் செய்துகொள்வதில் மிகப் பிரியம்தான் என்பது அவருக்குத் தெரியும். மிஸ் மேரி மார்ஸடன் முக அழகையும் நடையுடையையும் கண்டு அவர் மோகித்துப் போய்விட்டார். அந்தப் பெண்ணும் இவரோடு வெகு விநயமாகப் பேசினதோடு சுதேசகனவானைக் கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்கிற ஆசை அவளுக்கிருக்கிறதாகச் சொல்லியிருந்தாள்.

இந்த ஒரு வார்த்தையிலிருந்து அவளுக்கு தன்னைக் கலியாணம் செய்துக்கொள்வதில் ஆக்ஷேபமிராது என்று ஜகதாஸ் தனக்குள் தானே தன் மனதைத்திடம் செய்துகொண்டு விட்டார். அப்பொழுது அவருக்கு ஸம்ஸாரம் தவறிப் போயிருந்தபடியால் வெள்ளைக்காரப் பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்வதில் ஆக்ஷேபமொன்று மில்லை.

மிஸ் மேரி மார்ஸ்டன் வேப்பேரியில் வசித்துக் கொண்டிருந்தாள்.

ஜகதாஸ் ஒரு நாள் சாயங்காலம் துல்லியமான காசிப்பட்டு 10 கஜம் வாங்கிக்கொண்டு மிஸ்மேரி மார்ஸடனைப் பார்க்கப் போனர்.

அந்தப் பெண்ணும் அவரைக் கண்டு சரஸ சல்லாபமாய்ப் பேசிக்கொண்டிருந்தாள். அப்பொழுது அந்தப் பட்டையெடுத்துக் காட்டி "இதில் உடை தைத்துப்போட்டுக்கொண்டால் உன் மேனி யழகுக்கும் இந்தப் பட்டின் மினுக்குக்கும் பொருத்தம் நன்று யிருக்கு மென்று நினைக்கிறேன்" என்றுர் ஜகதாஸ்.

மிஸ்.—ஆம். இவ்வளவு தூரம் யோசனை செய்து என் மேனிக்குப் பொருத்தமான இந்தப் பட்டைப் பொறுக்கி யெடுத்து வாங்கி வந்ததற்காக நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்!

ஜகதாஸ்.—கைம்மாறு அந்தப் பேச்சே வேண்டாம். உன்னைப் பார்த்ததே போதும். நீ இந்த உடை தைத்துப் போட்டுக்கொண்டு நான் பார்க்க வேண்டும் என்றுர்.

மிஸ்.—அப்படியே! நாளைக்கு வாருங்கள். உல்லாஸமாகப் பேசிக்கொண்டிருக்கலா மென்றுள்.

ஜகதாஸுக்கு ஸந்தோஷம் பொறுக்க முடியவில்லை.

கோமுட்டி ஒரு பெண்ணைக் கலியாணம் செய்ய நினைத்து பாதிக்கலியாணம் நிச்சயமாய் விட்டது என்று சொன்னாற்போல், ஜகதாஸ் தனக்கு அவளிடத்தில் மனம் பற்றினதினால் பாதிக் கலியாணம் நிச்சயமாய்விட்டதென்றிருந்தார். : அவர் கொடுத்த பட்டையும் அவள் வாங்கிக்கொள்ளவே நிச்சய தாம்பூலம் வாங்கினதுபோல்தான் என்று எண்ணிக்கொண்டார்.

மிஸ் மேரி மார்ஸடன் அப்படி யொன்றும் நினைக்கவில்லை. வெள்ளைக்காரர்க்குள் அழகுள்ள பெண்களைக்கண்டு புருஷர்கள் மயங்கினுல் அது அவர்களுக்கு ஒருபெருமை. கலியாண மாகாத பெண்கள் புருஷர்களைத் தங்கள் மோஹவலையில் சிக்க வைத்து தவிக்கப் பார்ப்பது அங்கிலேயர் வழக்கப்படி சகஜமாயிருந்தது. இந்தப் பட்டை அவள் வாங்கிகொண்டதனல் அவள் யாதொரு பிசகும் செய்யவில்லை யென்று அவளுக்குத் தெரியும். ஜகதாஸ் அப்படி நினைக்கவில்லை யென்று நமக்குத் தெரியும். ஆனல் அவ அவளுக்குத் தெரியாது.

மறுநாள் சாயங்காலம் ஜகதாஸ் ஒரு பொட்டலம் மிட்டாயை வாங்கிக் கட்டிக்கொண்டு மிஸ் மேரி மார்ஸடனைப் பார்க்கப் போனர்.

மிஸ் மார்ஸடன் வீட்டுக்குச் சென்று கதவைத் தட்டினர். உடனே கதவு திறக்கப்படவில்லை. இரண்டாந்தரம் இடித்தார். பதில் இல்லை. அவருக்குஅவசரம் பொறுக்க முடியவில்லை.வாசல் ஜன்னல்கதவைத்தள்ளினர். அது திறக்கலாயிற்று. அது வழியாக எட்டிப் பார்த்தார். பார்த்த பார்வையில் திகைத்துப் போய் நின்று விட்டார்.

(இன்னும் வரும்.)

———:(*):———

## CHILDREN'S PAGE.

### The Limitations of the Intellect or The Four Accomplished Brothers.

சிறுவர் பக்கம்.

### "சதுஷ்கரணதாரணை," அல்லது, நான்கு சாமர்த்திய சகோதரர்கள்.

———:(++):———

"ஏழை பங்காளன்" என்றொரு கிழவனிருந்தான். உண்மையைச் சொல்லவேண்டுமானல் அவன் இன்னமும் இருக்கிறன்; இனியும் இருப்பான், இருக்கப்போகிறன். அவன் ஸ்வபாவமாக கால, தேச, வர்த்தமானங்களுக்குக் கட்டுப்பட்டவனில்லையானலும் விளையாட்டுக்குக் கட்டுப்பட்டவன்போல் காட்டி நடித்தான். அப்படியவன் நடித்ததிலிருந்து ஒருகூத்துண்டாயிற்று. அக்கூத்திலிருந்து நாலுபேர் குதித்தார்கள். அவர்கள்பேர்: ஆசாநேசன், பாசநாசன், இஷ்டப்பிரதாபன் ஹம்சபாவனன். இவர்கள் நால்வரையும் உண்டுபண்ணி அவர்களுடைய பிதா "அப்பா! நான் உங்களைப் பெற்றலுத்தேன். பரமபதத்தை நாடியுள்ளேன். ஆதலால் நீங்கள் உலகில் சென்று பிழைக்கும்வழிதேடிப் பிழையுங்கள் என்று சொன்னர்.

"சரி அப்படியே!" என்று நால்வரும் புறப்பட்டார்கள். புறப்பட்டுக் கொஞ்சதூரம் போகவே வழி நாற்கிளையாகப் பிரிந்த ஓரிடத்துக்கு வந்தார்கள். அங்கே நால்வரும் கூடியோசித்து ஆளுக்கு ஒருவழியாக அப்பாதையைப் பிடித்துக்கொண்டுபோய் அவரவர்களாலான தொழிலைக் கற்றுக்கொண்டு நாலு வருஷங்களானபின் நாமெல்லோரும் திரும்பி வந்து இந்த இடத்திலேயே சந்திப்போம் என்றார்கள்.

சரி! யென்று ஆளுக்கு ஒருவழியாக நால்வரும் நாலுபாதைகளைப் பற்றிச் சென்றார்கள்.

கொஞ்சதூரம் போனதும் ஆசாநேசன் "உள்ளம்கவர்கள்வன்" என்று புகழப்பட்டு பிரக்யாதிபெற்ற ஒரு கள்வத்தலைவனைக் கண்டான்.

அத்தலைவன், "அப்பா! நீயெங்கேபோகிருய்?" என்று கேட்டான்.

"ஐயா! நான் ஒரு தொழில் கற்றுப் பிழைக்கப் போகிறேன்" என்று சொன்னன் ஆசாநேசன்.

அப்படியானல் என்பின்னே வா! நான் உனக்குத் திருடக்கற்றுக் கொடுக்கிறேன் என்ருன் கள்வர் தலைவன்.

"திருட்டுத் தொழிலா! அது ஈனம். பிறர்க்கின்னு விளைப்பது. அத்தொழில் எனக்கு வேண்டாம்" என்ருன் ஆசாநேசன்.

"அப்படியல்ல! 'களவையும் கற்றுமற' என்றிருக்கிறது! யாருக்கும்தெரியாமல் எவராலும் கண்டுபிடிக்க முடியாதபடி திருடக் கற்றுக்கொடுக்கிறேன் பார்!" என்று சொல்லி அவனை அழைத்துக்கொண்டு போனுன்.

நாலு வருஷம் முடியுமுன் அவன் திருட்டுத் தொழிலில் தேர்ந்தவனுக வந்து சேர்ந்தான். மனிதனிருக்க அவன் இதயத்தைக்கவர்ந்துவா என்றுல் அவனை யறியாமல் கவர்ந்துகொண்டு போய் விடுவான். அவ்வளவு கெட்டிக்காரத்திருடனுய்விட்டான் ஆசாநேசன்.

இரண்டாவதான "பாசநாசன்" என்பவன் இன்னொரு வழி பிடித்துச் செல்கையில் தீர்க்கதரிசி யென்னும் வானசாஸ்திரி யொருவனைக் கண்டான். அவன் "அப்பாஉனக்கு வான்பார்க்கச் சொல்லித் தருகிறேன்வா. இந்த வித்தையில் தேர்ந்தவனுக்கு தூரதிருஷ்டிதானேவரும். அவன் கண்ணுக்கொளித்த இரகசியம் உலகில் எதுவும்கிடையாது!" என்றுசொல்லி அவனுக்கு வான சாஸ்திரத்தைப்போதித்துக் கடைசியில் ஒரு அற்புதமான ஸ்படிக யந்திரத்தை அவனிடம் கொடுத்து இதைக்கொண்டு பார்த்தாயானல் எந்தலோகத்திலானுலும்சரி, உன் கண்ணுக்கொளித்த ரகசியம் கிடையாதென்று சொல்லி யனுப்பினன். அப்படியே அவனும் அந்த வித்தையில் தேர்ந்தவனுக வந்து சேர்ந்தான்.

மூன்றுவதான "இஷ்டப் பிரதாபன்" மற்றெருவழிபற்றிச் செல்லுகையில் அர்ச்சுனனை யெதிர்த்துத் தோல்வியடைந்த வில்லியை (வேடனை)க்காட்டில்கண்டான். அவன் "அப்பா இந்தக்காட்டு வழியே எங்கே போகிருய்?" என்று கேட்க இஷ்டப்பிரதாபன் "நான்ஒரு தொழில் கற்றுப் பிழைக்கப் போகிறேன்" என்று சொன்னுன்.

"அப்படியானல் நான் உனக்கு வில்வித்தை கற்றுத் தருகிறேன் வா!" என்று அழைத்துப் போய் எப்பேர்ப்பட்ட குறியையானுலும் துண்டிரண்டாய்த் தறித்துவிடும்படியாக வில்லடிக்கும் வித்தை கற்றுக் கொடுத்தான். அவனும் அதில் தேர்ந்து திரும்பி வந்தான்.

நாலாவதவனுன "ஹம்ஸபாவனன்" தானும் அப்படியே போன வழியில் ஸோஹம் பாவனனைக் கண்டு அவனிடத்தில் தையல் வேலை கற்றுக்கொண்டான். இளந்தளிர்முதல் இரும்புப்பாறை, கற்பாறை, எதுவானுலும் ஒன்று படத்தைக்கவல்ல "தாதாத்மியஊசி" யொன்றை அவன் தன் குருவினிடம் பெற்றுக்கொண்டு தையல் வித்தையில் தேறித்திரும்பினன்.

நால்வரும் நான்காவது வருஷ முடிவில் நாலு பாதையும் சந்திக்கும் "சதுர்மறைவேதிகை" யென்னுமிடத்தில் வந்து கூடினுர்கள்.

ஒருவரை யொருவர் கண்டு சந்தோஷித்து நால்வரும் ஒன்று சேர்ந்து தங்கள் தகப்பனுரைக் காணப் போனுர்கள்.

அந்தக் கிழவன் தனது பிள்ளைகள் ஒவ்வொருவரும் ஒரு வித்தையைப் பூரணமாகக் கற்று வந்ததற்காகச் சந்தோஷித்து உங்கள் வித்யா சாமர்த்தியத்தைச் சீக்கிரம் நான் பரீக்ஷித்துப் பார்ப்பேன் என்று சொன்னுர்.

"அப்படியே!" என்று எல்லாரும் மனமகிழ்ந்திருந்தார்கள்.

ஒருநாள் பிள்ளைகள் நால்வரும் கூடஸ்த க்ஷேத்திரம் என்னும் ஒரு இரகஸ்யமான தோட்டத்தில் அந்தக்கரணச்சாவடியிலுட்கார்ந்து உல்லாசமாகப் பேசிக்கோண்டிருக்கையில் கிழவனார் தன் பிள்ளைகளைப் பார்த்து 'அப்பா நானொன்று சொல்லுகிறேன் கேளுங்கள்; "அதோ அந்த கோபுரத்தின உச்சியில் என்ன இருக்கிறது?" என்று கேட்டார். "பெண்மயில் ஐந்து முட்டைகளிட்டு அடைகாத்துக்கொண்டிருக்கிறது." என்றான் வானசாஸ்திர வித்தை கற்றுத் தேறியவன்.

"அந்த மயிலுக்கு கிலேசம்வாராதபடி அந்த முட்டையை அது அறியாமலும் அது அடைகாத்துட்கார்ந்திருக்கும் கோலம் கலையாமலும் திருடிக்கொண்டுவா பார்ப்போம்!" என்று சொன்னார் கிழவனார்.

சொல்லி வாய்மூடுமுன் திருட்டு வித்தையில் தேர்ந்த முதல் புத்திரன் அம்முட்டைகளை அப்படியே தாய்ப்பக்ஷியின் மனம் நோகாமலும் அதன் கோலம் கலையாமலும் எடுத்துக் கொண்டு வந்து கொடுத்தான்.

"பேஷ்!" என்று சொல்லி அதை வாங்கி ஒரு மேஜையின் நாலு மூலைகளிலும் ஒவ்வொன்றாகவைத்து நடுவில் ஒன்றை வைத்து, வில் வித்தை கற்றவனை நோக்கி "அப்பா! ஒரே அம்பால் இந்த ஐந்து முட்டை யோடுகளும் இருபாதியாகும்படி வில்லடிப்பாய் என்றார்.

அவனும் அப்படியே செய்து தன் வித்தையைக் காட்டினான்.

தையல் வேலை கற்றவனைப் பார்த்து அப்பா இரண்டான இந்த முட்டைகளை யெல்லாம் ஒன்றாகும்படி தைத்துவிடு என்றார்.

அவனும் அப்படியே இரண்டுபட்டு முட்டைகளைச் சேர்த்துச் சுவடு தெரியாதபடி ஒன்றுபடத் தைத்துவிட்டான். மறுபடியும் அம் முட்டைகளை இருந்த விடத்தில் கொண்டுபோய் வைத்துவிடச் சொன்னார்.

ஐந்துநாட் கழித்து அம் முட்டைகளிலிருந்து குஞ்சு பொறிக்கப்பட்டு வெளிவந்த பொழுது. அம்மயில் குஞ்சுகள் ஒவ்வொன்றின் கழுத்திலும் இந்திர நீலம்போன்ற வர்ண ரேகை பிரகாசித்தது. அஃதொன்றே அவை வெட்டுண்டு தைக்கப்பட்டதற்கு அடையாளமன்றிவேறில்லை.

கிழவர் பிள்ளைகளை ஆசீர்வதித்து நீங்கள் நால்வரும் கற்ற வித்தையைக் கசடறக் கற்றீர்கள். அவ் வித்தையைக்கொண்டு நீங்கள் ஒத்துப் பிழைப்பீர்களாக! என்று ஆசீர்வதித்துவிட்டுப் பரமபதமடைந்தார்.

கொஞ்சகாலம் சென்றபின் அவர்களிருந்த இராஜ்யத்தரசன் மகளை ஒரு வேதாளம்கொண்டுபோய் விட்டதாகக் கூக்குரலுண்டாயிற்று. அவ்வரசன் மிகவும் வியஸன முற்று தன் மகளை மீட்டுக்கொடுக்கிறவன் யாரோ அவனுக்கு அவளைக் கலியாணம் செய்துகொடுப்பதாகப் பறை யறைவித்தான்.

இந்த நாலு சகோதரர்களும் அதைக்கேட்டு அரசனை யடைந்து நாங்கள் உமது கன்னிகையை மீட்டுத்தருகிறோம், அவளிருக்கும் ஏகாந்தத் தீவுக்குப்போக ஒரு கப்பல் மட்டும் சித்தம் செய்து கொடுங்கள் என்று கேட்டார்கள்.

வானசாஸ்திர வித்தைகற்றவன் தனது ஸ்படிக யந்திரத்தை வைத்துப்பார்த்து அரசன் மகளை வேதாளம் ஏகாந்தத் தீவிலுள்ள வேதாந்த மலையினுச்சியில் வைத்துக் காத்துக்கொண்டிருக்கிறதாகவும் அந்தக்ஷணம் அந்த வேதாளம் அவள் மடியில் தலை வைத்துக்கொண்டு நித்திரை செய்வதாகவும் சொன்னான்.

திருட்டுத் தொழில் கற்றவன் உடனே சென்று அவளை அவள் மடியில் தலைவைத்துத்

தூங்கும் வேதாளம் தெரியாமல் எடுத்துக் கொண்டு வந்துவிட்டான்.

வேதாளம் விழித்துக்கொண்டதும் இராஜ குமாரத்தியைக் காணுமல் சீறிச்சினந்து அவளை யெடுத்துக்கொண்டு போகும் சகோதரர்கள் இருக்கும் கப்பலை நோக்கி ஆக்ரோஷத்தோடு ஓடிவந்தான். அந்த ராக்ஷஸன் அக்கப்பலையுமப் படியே அப்பளம்போல்நொறுக்கிவிடுவான்போ லிருந்தது.

அவன் ஆகாசத்திலிருந்து ஆக்ரோஷத் தோடு அக்கப்பலின்மேல் பாய்கையில் வில் வித்தை கற்றவன் அவனை ஒரு அம்பினுல் துண்டிரண்டாகத் துண்டித்து விழச்செய் தான்.

கொல்லப்பட்டவனுனும் மலைபோற் பருத் திருண்ட அவன் தேகம் அக்கப்பலின்மேல் விழுந்ததினுல் அது சுக்குத்தூளாகப் போய் விட்டது.

உடனே தையல்வேலை கற்றவன் தனது தாதாத்மிய ஊசியை யெடுத்து அக்கப்பலைத் தைத்து முன்போல் ஏகமாக்கிவிட்டான்.

நால்வரும் இப்படியாக இராஜகுமாரத்தியை மீட்டுக்கொண்டு அரசனிடம் சென்றுர்கள். அரசன் உங்களில் ஒருவனுக்கு என் குமாரத் தியைத் தருவேன். எல்லாரும் சரிசமமாக முயன்றிருக்கிறீர்கள்: ஆகையால் யார் என் குமாரத்தியை பாணிக்கிரகணம் செய்துகொள் கிற தென்பதைமட்டும் உங்களுக்குள் நீங்களே தீர்த்துக்கொள்ளுங்கள், என்றுன்.

தீர்க்கதரிசி நான்தான் பெண்ணிருக்கு மிடத் தைக் கண்டு சொன்னேன். ஆதலால் நானே அவளைக் கைபிடிக்க உரியவன் என்றுன்.

திருட்டுவித்தை கற்ற சகோதரன் நான் அவளை யெடுத்துக்கொண்டுவராவிட்டால் உன் வித்தையினுல் பயனென்ன என்றுன்.

உடனே வில்வித்தை கற்றவன் நான் வேதா ளத்தைக் கொன்றிராவிட்டால் உங்கள்கதி யென்னுகு மென்றுன்.

தையல்வேலை கற்றவன் சுக்குத் தூளாக உடைந்துபோன கப்பலைத் தைத்து ஏகமாக்கி யிராவிட்டால் எல்லார் கதியும் என்னுகு மென் றுன்,

இப்படியாக ஒவ்வொருவரும் தன் பாத்திய தையை யெடுத்துக்கூறி அப் பெண்ணின் கை யைக்கோற, அரசன் உங்களுக்குள் ஒற்றுமை யில்லாமையால் உங்கள் ஒருவருக்கும் என் பெண்ணைக் கொடுக்கமாட்டேன். ஆனுல் நீங் கள் செய்த உபகாரத்துக்கு உங்கள் ஒவ்வொரு வருக்கும் பாதி ராஜ்யம் தருகிறேன் என்று சொன்னுன். அவர்கள் சரியென்று ஒப்புக்கொ ண்டு பாதிராஜ்யம் பெற்றுவாழ்ந்தார்கள்.

"முத்தியென்னப்படும் மங்கையைச்சேர முயல்பவரும்
பத்தியென்னப்படு மீசனருளின்றிச் சார்தலுண்டோ."

என்று ஆகாசவாணியின் அசரீரி வாக்கு அம் பரத்தே முழங்கியது.

"சதுஷ்கரணம் நான்காலே
சமர்த்தெல்லாம் பெற்றுலும்,
அந்தக்கரண சுத்தியாலே
அவைபூரணமாக வேண்டும்."

———:(❋):———

## Ladies' Page.
## Chastity.
## பெண்கள் பக்கம்,
### கற்பு நிலைமை.

———(:o:)———

(முன் தொடர்ச்சி.)

கணவனுடைய தேட்டத்தில் வரும் பொ ருளளவிற்குத் தக்கபடி மிதமாய் செலவு செய் யாமற் கண்டபடி கைகொண்டமட்டும் செல வழிக்கிறுளே இவள் இன்னும் சிலநாளில் அவன் தலையில் ஓட்டைக் கவிழ்ப்பாள் என்று பிறனுல் இகழப்படாமல் திறமையுடனே சி

கன மாகச்செலவு செய்து குடித்தனத்தைக் காக்கவேண்டும்.

உலகத்தார் இராக்காலத்துக் குதவியாகப் பகற்காலத்திலும் மழைகாலத்திற்குதவியாக கோடைகாலத்திலும், முதுமைக் குதவியாக இளமையிலும், வேண்டியவைகளைத் தேடிவைத்துப் பாதுகாப்பதுபோல, இல்வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களை யெல்லாம் தருணமறிந்து சேகரித்துப் பின்னுக்காகுமென்று சிக்கெனக் காப்பாற்ற வேண்டுமே யல்லது வீட்டிலுள்ள பண்டங்களை அநியாயத்தில் அழிக்கலாகாது.

ஆணுய்ப் பிறந்தவர் பிதாவானுலும், சகோதரராணுலும், பெற்ற பிள்ளையானுலும், அவர் இருக்கு மிடத்தில் அச்சமின்றி இருக்கலாகாது. ஐந்துவயது ஆண் பிள்ளையைக் கண்டால் ஐம்பது வயதுப் பெண்பிள்ளையும் எழுந்திருக்க வேண்டுமென்கிருர்களே.

அகத்தினழகு முகத்தில் விளங்குவதுபோல் நடத்தையின் அழகு நடையில் விளங்கும். பெண் பூமா தேவிக்குச் சமானம், பொறுமைக்கு உறைவிடம். ஆதலால் அன்னம்போலவும் பெண்யானையைப்போலவும் மிருது நடையாகத் தலை இறங்கி நடக்க வேண்டும். கண்ணின் திருஷ்டி கருத்துள்ள விடத்திற் போகுமாதலால் தன் கால் பெருவிரல் பார்த்து நடக்க வேண்டும். கற்புடை மகளின் திருஷ்டியெல்லாம் தன் மூக்கு நுனியிலிருந்து கால் பெருவிரல்வரையில்தான் செல்ல வேண்டும். அப்படி யென்ருல், மனத்தை பஹிர்முகத்தில் அலைய விடாமல் அந்தர்முகப்பார்வை கெடாமல் பஹிர் வியவஹாரங்களை நடத்த வேண்டும். அகமுகப் பார்வை பஹிர்முகப்பட்டால் மனம் விஷயப் பற்றுகளிலாழ்ந்து சிதறிப் போம். கற்புடைமைக்கடையாளம் மனதைச் சிதற விடாது காப்பதாம். மனக்காப்பு காப்பே யன்றி மதில்காப்பு காப்பல்ல என்கிருர்களே. பெண்கள் பூமி அதிரும்படி நடந்தால் மனமும் அதிர்ந்துபோம். சாந்தி கலைந்துபோம்.

ஆண்மக்களிலாவது பெண்மக்களிலாவது துஷ்ட ஜந்துக்களா யிருக்கின்றவர்கள் தாரதம்மியம் பாராமல் அக்கிரமமாய்ப் பேசினுல் அதென்ன உடம்பிலே காய்த்துத் தொங்குகிறதா, "நாய் குலைக்க நத்தம் பாழாமா?" என்று நினைத்து சாதுவாய்ப் போக வேண்டுமே யல்லாமல் அவர்களை யெதிரிட்டுப் பத்ரகாளியைப்போல் அஞ்சாது "தெருச் சண்டைக்கு இடுப்புக் கட்டல்" ஆகாது. இதுதான் "உபேக்ஷை" யென்று சொல்வது.

கணவனுவது மற்றவர்களாவது ஏதேனும் ஒன்றைக் குறித்துப் பேசிக்கொண்டிருந்தால் அது என்ன சமாச்சார மென்று அவர்களை நேரே விசாரிக்கவும், சாடையாய்க் கதவின் சந்தில் அல்லது சுவர்க்கோழிபோல் சுவரின் அருகில் ஒன்றி யிருந்து கேட்கவுங் கூடாது. ஏனெனில் ஒட்டுக்கேட்கும் ஸ்வபாவம் மிகவும் கெட்டது. அது நம்பிக்கையைக் கெடுத்து குடித்தனத்தில் கலகத்தை யுண்டுபண்ணும்.

மேலே சொன்னதனுல் சமுசாரக் கூர்மையில்லாமலிருக்க வேண்டுமென்பது கருத்தல்ல. சமுசார விஷயங்களில் எப்போதும் கண்ணும் கருத்துமாய்ப் புத்தி கூர்மையோ டிருக்கவேண்டியதே. சில பெண்கள் மாமி வீட்டுக்கு வந்தவுடனே ஆரம்ப சூரத்துவமாய் எல்லாரும் ஒப்ப நடந்துகொண்டு வர வர அசாக்ரதையினுல் சோம்பல் மேலிட்டு குடித்தனப் பொறுப்பில்லாமலும் பெரியோர் என்கிற மதிப்பில்லாமலும் அலக்ஷியமாய் "எவனே செத்தான் அவன் ஏன் அழுதான்" என்று இருப்பதுண்டு. அது சுத்தப் பிசகு கற்புடைப் பெண்டிர் அப்படி யிருக்கலாகாது. "கற்பெனப்படுவது சொற்றிரம்பாமை" ஆதலால் வாக்கின் தூணி

சம் குறையாதபடி நடந்துகொள்ளவேண்டும்.

புருஷனுக்குப் பொருள் வரவின்றி அவள் வருமைப்படுங்காலத்தில் அவன் சம்பாதிக்கவில்லை யென்று அவனைச் செல்லரிப்பது போல் எந்நேரமும் வருத்தப்படுத்தப் படாது. தௌர்ப்பாக்கியம் வந்தால் அது புருஷனுடைய அசாக்ரதையால்தான் வந்தது என்று நினைக்கப்படாது. "ஏருழுகிறவன் என்ன செய்வான் பானை பிடித்தவள் பாக்கியம்" என்கிறுப் போல, "மனைமாட்சி" யுண்டானல் எப்பேர்ப் பட்ட புருஷனும் பாடுபட்டுழைக்கப்பின் வாங்கான். ஏனெனில் உழைப்பிலிருக்குப் பிழைக்கும் வழி. புருஷன் உழைக்கப் பிறந்தால் பெண் ஆற்றப் பிறந்தாள் என்பதை மறக்கக் கூடாது. வெளியிலே போய் அவன் என்ன பாடுபட் டுழைத்துக் கவலைபட்டானனுலும் வீடு வந்தால் அவன் சிரமம் கவலை யெல்லாம் வாசலிலேயே அவனை விட்டு நிற்க வேண்டும். கவலையும் கிலேசமும் விட்டுப் போன விடமே வீடு. அதற்கு மனையாள் உத்தரவாதியாயிருக்கிருள். அவள் கிரஹ தேவதைபோல் வீட்டை சாந்தம் விளங்க க்ஷேமகரமாய் வைத்திருக்க வேண்டும். காசும் பணமும் விஷய போகத்துக்குச் சாதனமே யன்றி விஷய சுகத்துக்காவது மனத் திருப்திக்காவது காரண மில்லை. மனத்திருப்தி ஆத்மார்த்த சாதகத்தால் விளைய வேண்டுமே யன்றி விஷயார்த்த சாதகத்தால் விளையாது.

பரபுருஷருடைய முகத்தைப் பாராமலும் அவர்களுக் கெதிரே பல்லைக் காட்டிச் சிரிக்காமலும், பரிகாசஞ் செய்யாமலும், பக்குவமாயிருக்க வேண்டும். "சிரித்தையோ சீரைக் குலைத்தையோ" என்கிறபழமொழியு மிருக்கிறதே. ஆகையால் உத்தம ஸ்திரீகள் மனக்காப்பு விஷயத்தில் வெகு ஜாக்ரதையாக விருக்க வேண்டும். மனது என்பது எல்லாம் ஒன்று. மனோ விகாரங்களென்பது பொது. தன் மனம் விகாரப்படாது மனக்காப்புச் செய்துகொள்வதோடு பிறர் மனம் விவகார முற்றதன் தன்னைப்பற்றுதபடியும் சாக்கிரதையாக விருக்க வேண்டும். பெண் மனம் கமலம்போல் பிரிய முற்றவரைக் கண்டு மலர்ந்தும் பிரிய மற்றவரைக் கண்டு குவிந்தும் இருக்க வேண்டும். அந்ய புருஷர்களைக் கண்டு சிரித்துவிட்டால் தன்னைக் கண்டு தன்னிடத்தில் பிரியம் வைத்துவிட்டாளென்று அந்ய புருஷர்கள் நினைக்கச் செய்யும். அந்த நினைவு தானே அநர்த்தம் விளைத்து ஆபத்துக்கிடமாம். உலகிலுண்டாகிற காம விகாரங்கள் காரணமாக நடத்தும் பாதகங்களெல்லாம் அநர்த்த பரம்பரையாக விளைவதே யன்றி வேறல்ல. கற்புடைமகளிர் அக்னிக்கொப்பாவர். அக்னி தன் சூடிழந்தால் நெருப்பு என்கிற பேர் அதற்கு இல்லாமற் போகிறது போல், பெண் பரபுருஷரைக் கண்டு சிரித்தால் கற்புத்தீ சூடிழந்து பேர்கெட்டுப் போகிறது.

தாமரை யில்லாத தடாகமும், சந்திர னில்லாத ஆகாயமும், புலவர்களில்லாத சபையும் அரசனில்லாத நாடும், மந்திரி யில்லாத அரசாட்சியும், படைத்தலைவனில்லாத சேனையும், தெய்வஸ்துதி யில்லாத நாவும், நற்சிந்தை யில்லாத நெஞ்சும், கிருபை யில்லாத கண்ணும், பயனில்லாத சொல்லும், மண மில்லாத மலரும்போலக் கற்புடை மனைவி யில்லாத வீடு சிறப்பின்றி இடுகாட்டுக்கொப்பாம்.

கண்டவர்கள் கேட்டவர்களெல்லாம் இந்த உத்தமி கல்வியிற் கலைமாதோ! கற்பில் அருந்ததியோ! கருணையிற் பார்வதியோ! பரிசுத்தத்திற் பவானியோ! என்று அதிசயிக்கும்படி விவேகமும், கற்பும், இரக்கமும், சுசியும் உள்ளவளாயிருக்க வேண்டும்.

"இல்லென் இல்லவள் மாண்பானல்" என்றபடி இல்லமுடையாள் (மனைவி) நற்குண நற்

செய்கைகள் பொருந்திய கற்பரசியாய் மாட்சி யுடையவளானுல் அவனுக்கு இல்லாதது எது? ஒன்று மில்லை யென்றபடி. அப்படிப்பட்ட மனை மாட்சி யில்லாத விடத்து அவனுக்கென்னவிருந்தாலும் பயனில்லை. ஆகையால் நல்ல மனையாளைப்போல பெரும்பாக்கியம் இவ்வுலகில் வேறில்லை. ஆதலால் பெண்கள் "மனை மாட்சி" யுடையவராய் இருக்க வேண்டும்.

இம்மையில் கணவனைப் பூஜித்த பெண்கள் மறுமையில் தேவர்களால் பூஜிக்கத்தக்க பெருஞ்சிறப்புற்றவர்களாவார்கள். பெண்கள் தன் கற்பினுல் காக்கும் காவலே காவலாவதன்றி அவர்களைக் கணவர் சிறையினுல்காக்கும் காவல் என்ன பயனைச் செய்யும். "அறைகாத்தான் பெண்டிழந்தான்" என்று பழமொழி யிருக்கிறதல்லவா.

———(:o:)———

### Extracts.

## Well Irrigation.

——:(*):——

கிணறு வெட்டுவதின் அவசியத்தைப்பற்றி 'கிருஷிகன்' பத்திராசிரியர் பின் வருமாறு எழுதி யிருக்கிறூர் :—

### கிணறு வெட்டல்.

விவசாயத்திற்குப் பாய்ச்சல் தண்ணீரின் உபயோகம் மிகவும் அதிகம். தண்ணீரே பயிர் வகைகளுக்குப் பிராணுதாரமானது. கானல் பறக்கும் பொட்டல் காடுகளைப் பாய்ச்சல் தண்ணீர் செழிப்பாக்குகிறது. அது தேசங்களைச் செல்வம் பொழியும்படி வளமாக்குகிறது. பாலை நிலங்களைப் பசுமையாக்கி அழகானபூஞ்சோலையாக்குகிறது. நிலங்களின்மேல் நின்று வீசும் கானல் காற்றைக் குளிர்ச்சியாக்கி அதன் கொடூரத்தைத் தணிக்கிறது. பாய்ச்சல் தண்ணீரானது ஒவ்வொரு வருஷத்திலும் நிலங்களினின்று தவருமல் சரியான விளைபலன் எடுக்கக்கூடிய சாதனமாகிறது. அது நிலத்தைப் போஷித்து அநேக பயிருணவை பக்குவப்படுத்துகிறது. பாய்ச்சல் தண்ணீரால் விளைவு அதிகப்படுவதால் நெருங்கிய ஜனசமூகத்தின் ஜீவனேபாயமாகிறது. நீர்ப்பாய்ச்சலால் நிலங்களில் முன்னிலும் மூன்று அல்லது நான்கு மடங்கு மட்டுமல்ல 10 அல்லது 20 மடங்கு அதிக லாபத்தைக் கொடுக்கிறது. பாய்ச்சல் தண்ணீர் நிலங்களிலுள்ள விஷப் பூச்சிகளைக் கொல்லுகிறது. பாய்ச்சல் தண்ணீரிருந்தால் கிருஷிகர் அடிக்கடி வானத்தைப் பார்த்து மழையை எதிர்பார்த்திருக்க வேண்டியதில்லை. பாய்ச்சல் தண்ணீரினுல் வெகு சுவையுள்ள பழவர்க்கங்கள் விளைவிக்கப்படுகின்றன. ஆதனுல் வருஷத்தில் இரண்டு முதல் மூன்று போகமும் விளையக்கூடும். நீர்ப்பாய்ச்சலினுல் விவசாயிகளின் வறுமை நீங்குகிறது. 'உழுதவன் கணக்குப்பார்த்தால் உழக்கேனும் மிஞ்சாது' என்ற பழமொழி பொய்யாகிறது. மழையின்மையால் அடிக்கடி உண்டாகும் பஞ்சமாகிய பிசாசை ஓட்டிவிடுகிறது.

இவ்விதமாய் கிருஷிகருக்குப் பிராணுதாரமான பாய்ச்சல் தண்ணீருக்கு முக்கிய ஆதாரம் கிணறுகள்தான். ஆற்றுக்கால்கள் ஏரி குளங்கள் இவையெல்லாம் மழையை எதிர்பார்த்தவைகளே. மழை பெய்யாவிட்டால் அவைகளில் தண்ணீர் காணமுடியாது. கிணறுகளிலோ கிருஷிகரின் குடும்பத்துக்கும் கால் நடைகளுக்கும் அவசியமான ஆகாரம் கொஞ்சமாவது சம்பாதித்துக் கொள்ளக்கூடியதான தண்ணீர் இருக்கும். ஆகையால் கிருஷிகருக்கு மிகவும்அவசியமானதும் இன்றியமையாததுமான கிணறுகளைத்தோண்டவேண்டும். சர்க்காரில் குறைந்தவட்டிக்குக் கடன்வாங்கி இந்த முக்கியமான காரியத்தை நடத்திக்கொள்ளலாம். 20, 25 வருஷகாலத்தில் கொஞ்சம் கொஞ்சமாய் நிலத்தீர்வையுடன் சேர்த்துச் செலுத்திக் கடனைத் தீர்த்துக்கொள்ளலாம். சர்க்காரில்

கடன் கொடுக்கத் தயாராயிருக்கிறார்கள். அப்படிக் கடன் வாங்குவதில் யாதொரு தீங்குமில்லை. பயப்படவேண்டிய காரணமுமில்லை. நன்செய் நிலங்களிலுங்கூட கிணறுகள் வெட்டி வைத்தால் ஏரிகளில் தண்ணீர்த்தட்டுண்டாகும் தருணங்களில் கிணறுகளிலிருந்து தண்ணீர் இறைத்துப் பாய்ச்சி பயிரைக் காப்பாற்றிக் கொள்ளலாம். தோட்டக்கால் நிலங்களுக்கோ கிணறுகள் மிகவும் உபயோகமுள்ளன ஆகையால் கிருஷிகரே! நீங்கள் விர்த்தியடைய விரும்புவீரானால் முதல் முதல் செய்யவேண்டிய காரியம் கிணறு வெட்டுவதுதான்.

——(*:)——

## Alexandrian Laurel Tree.

## புன்னை மரம்.

——:(*):——

வெ. ப. திருமலையப்ப முதலியார் அவர்கள் புன்னைமரம் சாகுபடி செய்வதைப்பற்றிக் கிருஷிகனுக்கு எழுதியிருக்கும் வியாஸம் எல்லாருக்கும் உபயோகமா யிருக்குமென்று கீழேயெடுத்துப் பிரசுரிக்கிறோம். இது பிரணவ லக்ஷணமான "நீங்காத பச்சை நிறம்" வாய்ந்த விருக்ஷங்களில் ஒன்று. தேவிக்கு மிகவும் பிரியமானது.

### பொது.

இந்த மரம் தீப எண்ணெய்க்கு வேண்டி விர்த்தியாய்க் கொண்டிருக்கிறது. மரத்தினுள் நார்கள் பின்னி யுற்பத்தியாவதால் புன்னை என்று பேர்வந்ததென்கலாம். திருவாங்கூர் சமஸ்தானத்தில் விஸ்தாரமான பின்னந்தோட்டங்களுண்டு. திருநெல்வேலி ஜில்லா தென்காசி, அம்பாசமுத்திரம் தாலூகாக்களிலும் மேற்குத் தொடர்ச்சி மலையடிவாரம் மா தென்னந்தோப்புகளினூடே புன்னைமரங்களிருக்கின்றன. தனிமரம்போல் கலப்பு தினுசு மரம் சிரேஷ்டமன்று. தஞ்சாவூர் ஜில்லா நாகப்பட்டணம் பக்கமும் கோயமுத்தூர் ஜில்லாவில் ஏகதேசமாயும், ஸிலோன் தீவுகளிலும் புன்னை மரங்களுண்டு. திருவாங்கூர் இலாகாவிலும் திருநெல்வேலி ஜில்லாவிலும் புன்னை எண்ணெய் யாட்டப்படுகிறது. மற்ற பாகங்களில் எண்ணெய் பிழியும் பழக்கமில்லை. அந்த பாகங்களிலிருந்து புன்னைக்கொட்டைப் பருப்பு திருநெல்வேலிக்கு வந்து எண்ணெய் எடுக்கப்படுகிறது. திருவாங்கூர் சமஸ்தானம் கன்னியாகுமரி பக்கம் பேச்சிபாரை அணைக்கட்டு வேலையாய் கால்வாய் புறப்பட்டதில் புன்னை மரமுள்ள நிலங்களும் நஞ்செயாக மாறியதில் அநேகபுன்னைமரம் வெட்டப்பட்டு சேதம்ஜாஸ்தியாயிற்று. புன்னை குறையவே எண்ணெய் விலை ஏறிவிட்டது. இந்தக்குறை தீருமாறு ம-ா-ா-ஸ்ரீ, ஜே. ஆர். ரங்கராஜா அவர்கள் திருச்செந்தூர் தாலூகா குலசேகரபட்டணத்தில் 100 ஏக்கர் புன்செய் நிலத்தில் புன்னை பயிரிட உத்தேசித் திருக்கிறார்களென்றறிய அத்யந்த மகிழ்ச்சி தருகிறது. இந்த விர்த்தியை பக்க விவசாயிகள் பார்த்து புன்னந்தோப்பு ஏற்படுத்த தூண்டுகோலாகும். சமுத்திரக்கரையோரமெல்லாம் புன்னை நட்டால் தேசஞ் செழிப்புறும். முதிர்ந்த புன்னைமரம் வீட்டுக் கதவு வடத்துக்கும் இளம் புன்னங் கிளைகள் உழவு நேர்க்கால் முதலிய விவசாயக் கருவிகளுக்கும் பிரயோசனப்படும். எங்கெங்கே விருக்ஷம் யதேஷ்டமாய் உற்பத்திசெய்யப்படுகிறதோ அங்கே மழை யதேஷ்டமாய் பொழியும். சீதோஷ்ணம் சமனாகி பூமி வளமாக ஏதுவாம்.

### புன்னைக்கேற்ற நிலம்.

களிமண் குறைவாயும் மணல் அதிகமாயுமுள்ள நிலமும் குருமண் (கோக்கோ பவுடர்) நிறம்போன்ற மண்ணிற விசேஷம். எவ்வித மண்ணுயினும் இருமண் கலந்து பொலபொலத்த மண்ணுயிருக்க வேண்டும். அடி மண்ணில் நீர் வசதியாயிருந்தால் உத்தமம். 3-4-அடி ஆழத்துக்குக் குறையாமல் மண்கண்டமாயு

மிருத்தல் அவசியம். மண் கீண்டத்துக்குக் கிழாக கட்டியான சரள்களின்றி இளக்கமான சரள் உள்ள பூமியாக வமைமின் புன்னைவேர் வெகுதூரம் பரவி விருத்தியாகும். கெட்டிசரள் நிலத்திலும் கருப்புநிற சரளிலும வேர் சரியாய் ஓடிப் பரவாமல் மரத்து இலை குட்டம் பாய்ந்த மாதிரி சிறுத்துவிடும்; புஷ்டியாயிரா. சமுத்திரக்கரை யோரங்களில் திருவாங்கூரிலாகாவில் விர்த்தியாகிறது. களிமண் சம்பந்தமான நிலங்களில் உற்பத்தியான மரத்தின் கொட்டை பருத்து எண்ணெய் அளவு கம்மிப் படுகிறது. காய்ப்பும் மட்டு. களர் சம்பந்தமான நிலத்தில் மரம் விஸ்தாரம் படராமலும் அதவா உற்பத்தியானாலும் மரம் படுகையாய் விடுகிறது. புன்னை பயிரிட வடிகால் வசதி நிலம் அத்யாவசியம். புஞ்சைகளில் 5-வருடம் வரை ஜலம் எடுத்து ஊற்றி விர்த்திசெய்யலாம்.

## ஜாதி.

பெருமணி, தரவழி, சிறுமணி யல்லது நாக மணி என்ற 3-தினுசுண்டு. பெருமணி கனத்தோடும் குறைந்த காயாகவிருக்கும். இது தென் காசித் தாலூகாவுக் குரியதுபோலும். இங்கு மற்ற தினுசு கிடையா. தரவழி நிதானமான நெல்லிக்காய் கனத்திலும் தோடு குறைவும் பருப்பு மிகுந்த காயாகவிருக்கும். இந்தத் தினுசு அம்பாசமுத்திரம் தாலூகாவில் ஏராளமாயுண்டு. இங்கு பருமணி கொட்டை ஏகதேசமாகவே யிருக்கும். சிறுமணி சுண்டக் காயளவு கனதியாயும் ஈருள்ளி உலர்ந்த தோலி போன்றுள்ளதோடும் பருப்பு மிகுந்து மிருக்கும். திருவாங்கூர் சமஸ்தானத்திலிருந்து பேட்டைக்கு வருகிறது பெருமணி கொட்டை எண்ணெய் காண்பது மட்டு. பிந்தின தரம் இரண்டும் எண்ணெயளவு மிகுந்து காண்கிறது. 1-பட்டணம் படி பருமணி புன்னைக்கொட்டை 80-எண்ணமும் ஆதேயளவு தரவழி புன்னைக் கொட்டை 150-ம் சிறுமணி கொட்டை 1000-முதல் 1500-வரை எண்ணங்களிருக்கின்றன.

## விரை போடுதல்.

மழைகாலத்தில் புன்னங் கொட்டைகளை பூமியில் பதித்து தானே யுண்டாகட்டுமென்று விடுவதே எங்கும் பழக்கம். இவை விர்த்தியாய் பலனுக்குவர 10-வருடத்துக்கு மேலாகச் செல்லும். பரிபாலித்து விர்த்திசெய்த மரம்போன்று புஷ்டியாயிரா. சில இடங்களில் 2-3 வருடம் ஜலம் எடுத்துவிட்டு நிறுத்துவது முண்டு. தென் காசியில் 2-3 விவசாயிகள் தானே யுண்டான கன்றுகளைப் பெயர்த்துநட்டும்]பரிபாலனஞ் செய்ததில் தக்க பலனைதை நன்கறிவோம். செடிகளோ விருக்ஷக்கன்களோ 2-3 முறை பெயர்த்து நடுவதில் ஆணிவேர் பலங்குறைந்து பக்கவேர்மிகுதியாய்ப் படர்ந்து தகுதியான பலன் தருமென்ற சாஸ்திரக்கொள்கை யனுபவத்தில் ஊர்ஜ்ஜிதமாகிறது. ஆகவே எந்தத் தினுசும் நாத்துப் பாவி கன்பெயர்த்து நடுவது சிரேஷ்டமாய்க் கொள்ளலாம்.

## நாத்து பரவுதல்.

புன்னை விரைநாத்து பரவும் பூமியை $1\frac{1}{2}$ அடி ஆழந் தணித்து மண்ணைப் புறப்படுத்த வேண்டியது. கீழ்தளத்தில் உடைந்த ஓட்டு சல்லிகளை இடைகளின்றி, பரப்பி மேல் பல தினுசு வண்டல்மண் போட்டுக் கிடங்கு நிரப்பவேண்டியது. தளத்தில் ஓடு போடுவதால் புன்னங்கன் வேர் பின்னி ஆழமாய் பூமியிலிறங்க முடியாது. கன்று பேர்க்கும்போது வெகு சௌகரியமா யிருக்கும். பின்பு $\frac{3}{4}$ அடி அகலம் வரப்பும் $1\frac{1}{4}$ அடி அகலங் கால்களும் போட்டு பாசன கால்களும் ஏற்படுத்த வேண்டியது. காலதிகரித்ததெல்லாம் கன் வேர் பின்னியதை கவாத் செய்யவுங் கன் பெயர்க்கவும் எளிதாகும். கன்கள் நெருக்கடியின்றி, கலக்கப் பாவுவதே கன் திடகாத்திரமாயும் புஷ்டியாயு

மிருக்கும். மேற்கூறிய வரப்புகளில் ½ அடிக்கொரு புன்னை விரைபதித்து ஜலம் விடவேண்டியது. வாரந் தவறாமல் ஜலம் விடவேண்டும். 4-5 மாதத்தில் கண் முளைத்துவிடும் கண் முளைத்தபின் ஒரு வருடம்வரை பாத்திகளிலிருக்க வேண்டும். சிறு கண்ணெடுத்து வைப்பது புஷ்டியாயுண்டாகா. பசுவின் கன்று 3-மாதந் தாய்ப்பாலூட்டி பின் கைத்தீனி கொடுத்து வளர்த்தால் புஷ்டியா யுண்டாகும். பிரதமத்தில் தாய்ப்பாலின்றி எவ்வளவு போஷிக்கினுங் கன்று மெலிந்தே போகும். அவ்வாறே புன்னங் கன்றுகளும் நாத்துப் பாவிய நிலத்தில் சரியாய் வளர்ந்தபின் எடுத்து நடுவது நலம். புன்னங்கண் பாவும் பாத்திகளில் மாட்டெரு போட்டால் வேர் புழு பாதித்து கண் சேதமாகும். மக்கிய மரத்து இலைகளும் ஆட்டெருவும் போடலாம். ஜாஸ்தியாய் வளர்ந்த சேலம் ஒட்டுமாங் கண்கள் பாத்திகளில் வைத்தே வேர்களின் கீழ்பாதி துண்டித்து 2-1 மாதம் நிறுத்தி வைக்கப்படுகிறது. பின் வேர் கவாத்தான கண்களைத் தொட்டிகளில் வைத்து ஒட்டுகெட்டி வருகிறது. அவ்வாறே புன்னங்கண் முளைத்து 7-8 மாதஞ் சென்றபின் கால்களில் உள்ள மண்ணைவெட்டி பக்கங்களில் குவித்து விட்டுப் பூமிக்கு 1-அடிக்குக் கீழாக வரப்புகளிலுள்ள புன்னங்கண் வேர் கீழ்ப்பாதியை நறுக்கி வெட்டிய மண்ணை நிரவி ஜலம்விட்டு வரவேண்டியது. வரப்பு பேராமல் கண் வேர் கவாத்தாக வேண்டும். கவாத்தான கண்ணதிர்ச்சி தீர்ந்துண்டாக 2-மாதஞ் செல்லும். ஆணி வேர் தரித்தகண் பக்கவேர் நன்றாய் பரவும். பக்கவேர் பரப்பிய மரம்போன்று ஆணிவேர் நிலைத்த மரம் நன்றாய்க் காய்க்கமாட்டா. புன்னங் கண்ணடியில் சுண்டுவிரல் கனங் கம்பு உண்டானபின் கண்ணெடுத்து வைக்கலாம். தரவழி புன்னைக் கொட்டையே நாத்துப் பாவ சிரேஷ்டம்.

—:(++):—

**THE VICEROY'S BIRTHDAY:** *Patters Garden treat to Children:*—Mr. C.V. Swaminatha Iyer of the *Vivekachintamani* has issued a 'CHILDREN'S SPECIAL' supplement containing in English a poem entitled "Three words of strength:—"Hope, Faith and Love," together with a Prayer of Rabindranath Tagore from his *Gitanjali* in Tamil 'BURNS' GIFT TO THE BAIRNS' presenting the ideal of "the Honest Man" and THE CHILDREN'S TRIBUTE OF LOVE,' to impress the importance of the occasion in children's mind. This was presented to every winner of the prize by the chairman Mr. J. H. Stone, C. I. E. at the afternoon amusements and treat given to the children by Mr. Lodd Govindoss Krishnadoss at Patters Garden over which he presided. (It was also distributed in the morning of the Children's day at the P. S. High School meeting at Mylapore.)—*The Indian Patriot.*

---

*The Vivekachintamani*—The May number of the Vivekachintamani opens with an interesting article on "Speak the truth in words of Love" followed by another on the Gurukula and its ideal. Among other articles of interest are: The worship of the Mother; Historical Selections; Scientific notes and facts; The self-executive Nature of the Eternal Law; Easy readings from Early English History, Sri Sankara, Lalitambal and Dayanandar a detective novel.—*The Madras Standard, 6th June, 1913.*

---